* பி. டி. உஷா: முதலில் மெடல்; பிறகுதான் கல்யாணம்.



மங்களூர் மெயிலில் போய், காலிகட் என்று ஆங்கிலத்திலும், கோழிக்கோடு என்று மலையாளத்திலும், கள்ளிக்கோட்டை என்று சிலரால் தவறாகவும் அழைக்கப்படும் ஊரில் இறங்கினோம்.

ரயில்வே ஸ்டேஷனிலிருந்து பஸ் நிலையத்துக்கு வந்து, அங்கே பையோளிக்கு எந்த பஸ் போகும் என்று விசாரித்ததும், "உஷாண்டே ஊர் பையோளி?" என்று ஒருவர் கேள்வியாய்க் கேட்டுவிட்டு, ஒரு பஸ்ஸைக் கைகாட்ட, ஏறி உட்கார்ந்து கொண்டோம்.

ஒரு மணி நேர யாத்ரண்ட பின்னெ ஞாங்கள் பையோளி வந்தது!

பஸ்ஸை விட்டிறங்கி அங்கிருந்த ஒரு சின்னப் பையனிடம் "பி. டி. உஷாவோட வீட்டுக்கு வழி?" என்று தமிழில் கேட்டோம்.

"கூடே வரு! ஞான் கூட்டிண்டு போகும்" என்றான் பையன்.

"உஷாவைத் தெரியுமா உனக்கு?"

"ஓ! ஓடுந்த ஆளல்லோ? அறியும்! அறியும்! ஞாங்களுடே கிராமத்திலே ஆளானல்லோ?" என்றான். முகத்திலே தற்பெருமை பளிச்சிட்டது.

**உலக அரங்கில் இந்தியாவின் பெருமைகளை உயர்த்திக் கொண்டே வரும் பி. டி. உஷாவின் சொந்த ஊர் கேரளாவிலுள்ள 'பையோளி' கிராமம். அங்கே சென்று வந்த நமது நிருபரின் ஸ்பெஷல் ரிப்போர்ட்...**

ஒரு பள்ளிக் கூடத்தைக் கடந்து போனபோது, "இதுதான் உஷா படித்த பள்ளிக் கூடம்" என்றான் பையன்.

ஸ்கூலுக்கு மிக அருகிலேயே உஷாவின் வீடு.

டிபிகல் கேரளத்து கிராமப்புற வீடு. பெயர் பிரதீப் நிலையம்.

வெளிச்சுவரில், வாசல் படிக்கு இரண்டு பக்கமும் காலைத் தூக்கிக் கொண்டு 'ஏசியாட் அப்பு' டான்ஸ் ஆடிக் கொண்டிருந்தார்.

சின்ன வராந்தா.

ஒரு ஹால். அதிலே ஸ்டீரியோவுடன் டூ இன் ஒன், கலர் டி. வி., வீடியோ டெக். இன்னொரு சின்ன அறை. அதிலே ஷோகேஸ்கள். அவை எல்லாவற்றிலும் கோப்பைகளும், கேடயங்களும் பல்வேறு உலோக பதக்கங்களும், மற்றும் பல பரிசுப் பொருட்களுமாய் அழகாக அடுக்கி வைக்கப்பட்டிருந்தன.

ஒவ்வொன்றாய்ப் பார்த்துக்கொண்டிருந்தபோது, "இவை எல்லாவற்றுடன் கூட ஒலிம்பிக்ஸ் மெடல் தான் உஷாவின் லட்சியமும், எங்கள் எல்லாருடைய ஆசையும் கூட!" என்றனர் குடும்பத்தினர் அனைவரும் ஒட்டு மொத்தமாய்.

உஷாவின் அப்பா பெயர் பைத்தால். ஒல்லியான உயரமான தோற்றம். மலையாளம் மட்டுமே தெரியும். இரண்டு மூன்று தலைமுறைகளாக பையோளியில்தான் வசித்து வருகிறார்கள். துணி வியாபாரம் செய்கிறார் பைத்தால். அம்மா பெயர் லட்சுமி அம்மா. உஷாவின் உயரத்தில் தோளைத்தான் தொடுவார். (உஷா 169 செ. மீ.) பேசவே யோசிக்கிறார்; ரொம்ப!

# உலக அரங்கில் உஷா!



* வீட்டிலுள்ள மெடல்கள்...

இவர்களுக்கு மொத்தம் ஐந்து பெண்கள்; ஒரு பையன். மூத்த பெண் சீதா. அடுத்தது உஷா. அடுத்தவர்கள் புஷ்பா, ஷோபா, சுமா, கடைசிப் பையன் பிரதீப். மூத்த பெண்ணுக்குக் கல்யாணம் ஆகிவிட்டது. உஷாவின் தம்பி, தங்கைகள் எல்லாரும் ஸ்கூலில் படிக்கிறார்கள்.

உஷா முதல் வகுப்பிலிருந்து ஏழாவது வகுப்பு வரை படித்தது வீட்டுக்குப் பக்கத்திலுள்ள திரிகோட்டியூர் உயர் துவக்கப் பள்ளிக்கூடத்தில்தான். சின்ன வயசிலிருந்தே அப்படி ஓர் ஓட்டம் ஓடுவாராம்.

உஷா நாலாவது வகுப்பில் படித்துக் கொண்டிருந்த சமயம்; ஸ்கூலில் ஸ்போர்ட்ஸ் நடந்ததாம். ஓட்டப் பந்தயத்தில், நாலாவது படித்துக் கொண்டிருந்த உஷா, ஏழாம் வகுப்புப் பெண் ஒருத்தியைத் தோற்கடித்தான். இதைக் கவனித்தார் பள்ளிக்கூட உடற்பயிற்சி ஆசிரியர் பாலகிருஷ்ணன். "இவள் சாதாரணப் பெண் இல்லை. பிற்காலத்தில் அசுர சாதனை நிகழ்த்தப் போகிறாள்" என்று அப்போதே கண்டுபிடித்த தீர்க்கதரிசி இந்த பாலகிருஷ்ணன்தான்! ஒல்லியான, உயரமான சுமார் ஐம்பது வயது மதிக்கத் தக்க தோற்றம். வெள்ளைச் சட்டை, வெள்ளை வேஷ்டியில் ரொம்ப எளிமையாய் இருக்கிறார். உஷாவின் திறமையை உணர்ந்து, அதை வளர்த்து விட்டதற்காக நம் நாடே இவருக்கு நன்றிக் கடன்பட்டிருக்கிறது என்றால் அது மிகையில்லை.

உஷாவின் குடும்பம் முதலில் இந்த மாதிரி ஸ்போர்ட்ஸ் நடவடிக்கைகளுக்கு ஆதரவு தரவில்லையாம். பாலகிருஷ்ணன்தான் முதலில் உஷாவின் பெற்றோரிடம் பேசி, பின், உஷாவின் மாமாவிடம் போய் உஷாவின் திறமைகளையும், அது வளர்க்கப்பட வேண்டிய அவசியத்தையும் எடுத்துச் சொல்லி, அவர் மூலமாக உஷாவின் பெற்றோருக்கு எடுத்துச் செல்ல வைத்து மனுஷர் ரொம்பச் சிரத்தை எடுத்துக் கொண்டிருக்கிறார்.

அடுத்து உஷா, கண்ணனூரில் உள்ள அரசாங்க விளையாட்டுப் பள்ளியில் சேர்ந்தார். கல்லூரிப் படிப்பு பாலக்காடு மெர்ஸி காலேஜில்.

இப்போது உஷாவின் கோச் ஒ. மாதவன் நம்பியார். முன்னாள் விமானப் படைக்காரர். உஷா கண்ணனூர் பள்ளியில் இவரைச் சந்தித்தார். அதன்பின் உஷாவின் பிரத்தியேகக் கோச் ஆகிவிட்டார். உஷா வீட்டிலிருந்து ஐந்து கி. மீ. தூரத்தில் வீடு. சரியாக ஐந்தரை மணிக்கு, தன் மோட்டார் சைக்கிளில் வந்து விடுவார் நம்பியார். 'தினமும் தவறாமல் உடற்பயிற்சி செய்ய வேண்டும். உடம்பு நல்ல ஸ்டாமினாவுடன் இருக்க இது அவசியம்,' என்பது நம்பியாரின் கொள்கை. இது விஷயத்தில் அவர் ரொம்பக் கண்டிப்பு! நம்பியாருக்கு நான்கு குழந்தைகள். தன்னை, அவரது ஐந்தாவது குழந்தையாக நம்பியார் நடத்துவதாய்ப் பெருமையுடன் சொல்கிறார் உஷா.

* உஷாவின் வீடு.



* உஷா பிறந்த தேதி: 18 மே 1964.

* உஷாவுக்குப் பிடித்த உணவு இட்லி, புட்டு, தோசை, முட்டை, பொரித்த மீன், சிக்கன்.

* உஷா படு சிம்பிள். மெல்லிய செயின் ஒன்றைத் தவிர காதுகளில் சிறிய ஸ்டெட். மற்றபடி வேறு நகைகள் அணிவதில்லை.

உஷா... உஷா... ஓ



* ஏஷியாட், ஒலிம்பிக்ஸ் போன்றவற்றில் உஷா பங்கேற்ற நிகழ்ச்சிகள் பதிவு செய்யப்பட்ட விடியோ கேஸட்டுகளை சேகரித்துப் பத்திரமாய் வைத்திருக்கிறார்.



* பாலகிருஷ்ணன்:



* ஓ. எம். நம்பியார்.

* உஷா படித்த பள்ளி.



உஷாவைப் பற்றி நம்பியார் சொல்கிறார்: உஷா ரொம்ப ஸென்ஸிடிவ்; ஒழுக்க மானவர்; மரியாதை தெரிந்தவர். எதையும் ரொம்ப பர்ஃபெக்டாய்ச் செய்யும் குணம் உடையவர். ஆனால் மைதானத்துக்கு வெளியே எளிதில் உணர்ச்சி வசப்படுகிற டைப். அவ்வளவாய்ப் பொறுமை கிடையாது.

உங்கள் வாழ்க்கையில் மிகவும் மகிழ்ச்சியான தருணம் எது?''

ஒலிம்பிக்ஸில் மயிரிழையில் பரிசு கை நழுவிவிட்டபோது, மறைந்தபிரதமர்இந்திரா காந்தியிடமிருந்து, ''ஒவ்வொருவரும் வெற்றிக்குத்தான் பாடுபடுகிறார்கள். உனது விடாமுயற்சிக்கு எனது மனமார்ந்த பாராட்டுக்கள்'' என்ற செய்தி கிடைத்த தருணம்தான் வாழ்க்கையின் மகிழ்ச்சியான மறக்கவே முடியாத சந்தர்ப்பம்.''

''உங்கள் லட்சியம்?''

''அடுத்த 1986 ஆசியவிளையாட்டுக்களின் போது இந்தியாவுக்காக மூன்று தங்க மெடல்களாவது பெற வேண்டும்; அதே போல, 1988 சியோல் ஒலிம்பிக்ஸின் போது இரண்டு மெடல்களாவது பெற வேண்டும் என்பதுதான்.''

''கல்யாணம் பற்றி...?''

''முதலில் மெடல்; கல்யாண விஷயங்களை அப்புறம் பார்க்கலாம்!''

''கணவர் எப்படிப்பட்டவராய் இருக்க வேண்டும்?''

''விளையாட்டு வீரராய் இருக்கக் கூடாது!''

''சொந்தத்தில் மாப்பிள்ளை யாராவது இருக்கிறார்களா?''

''இல்லை.''

உஷாவின் பெற்றோர்களைப் பார்த்து, ''உங்கள் மகள் பல்வேறு போட்டிகளுக்கும் பல நாடுகளுக்குப்போகிறார்; பலரைச்சந்திக்கிறார். அவராகவே தன் கணவரைத் தேர்ந்தெடுத்துக் கொண்டால் உங்கள் ரியாக்ஷன் எப்படி இருக்கும்?''

''எங்கள் பெண் அப்படி ஒரு போதும் செய்ய மாட்டாள்! அதில் எங்களுக்குத் திடமான நம்பிக்கை உண்டு!''

விடைபெற்றுக் கொண்டு திரும்பக் கோழிக் கோட்டிற்கு வந்து, ரயில்வே ஸ்டேஷனுக்குப் போனோம். இங்கேதான் உஷாவிற்கு உத்தியோகம். ''தென்னக ரயில்வேயில் 82 ஜூனில் உஷா ரிசர்வேஷன் கிளார்க்காக அப்பாயிண்ட் செய்யப்பட்டார். ஆசிய விளையாட்டுக்களில் சாதனை புரிந்தபின் அவருக்குத் தலைமை ரிசர்வேஷன் கிளார்க்காகப் பதவி உயர்வு தரப்பட்டது. ஒலிம்பிக்ஸ் சாதனைக்குப்பின் இப்போது ஆஃபீஸர் ஆன் ஸ்பெஷல் ட்யூட்டி ஆக பிரமோஷன் தரப்பட்டுள்ளது. 'உஷாவின் பெயர் இங்குள்ள பணிபுரிவோர் பட்டியலில் இருக்கிறது. அவ்வளவுதான். மற்றபடி அவர் இங்கே வந்து வேலை செய்ய வேண்டிய அவசியமில்லை.'' என்றார் ஸ்டேஷன் சூப்ரின்டென்டெண்ட் நாராயணன்.

— எஸ். சந்திரமௌலி.

படங்கள் : தாமு.

அட்டை வண்ணப்படம் : யோகா

- நேரம் கிடைக்கும் போது, பத்திரிகைகள், கதைப் புத்தகங்கள் படிக்கிறார்; வீடியோவில் சினிமா பார்க்கிறார்.
- மலையாளம் மற்றும் இந்திப் பாட்டுகளைக் கேட்டு ரசிப்பார்.
- தெரிந்த மொழிகள் மலையாளம், ஆங்கிலம், இந்தி, தமிழ் கொஞ்சம் கொஞ்சம்!
- எங்கே ஊருக்குச் சென்றாலும் தன் கூடவே, தன் அப்பா, அம்மா, கூடப் பிறந்தவர்கள் அடங்கின குடும்ப குரூப் போட்டோவை எடுத்துக் கொண்டு போவார் உஷா.
- உஷாவுக்குத் தெய்வ பக்தி உண்டு. பெட்டியில் குருவாயூரப்பன் படம் தவறாமல் இருக்கும்.
- உஷா வீட்டில் இப்போதுள்ள கலர் டெலிவிஷன் கேரள அரசாங்கத்தாரால் பரிசளிக்கப்பட்டது; வீடியோ, உஷா ஜப்பானிலிருந்து வாங்கி வந்தது.
- சமீபத்தில் ஜாகர்தாவில் நடந்த போட்டிகளில் கலந்துகொண்டதால் உஷாவை அங்கு தெரியாதவர் யாருமில்லை. மைதானத்துக்குள் உஷா வரும் ஒவ்வொரு முறையும் மக்கள் ஆரவாரம் செய்து, தம் மகிழ்ச்சியைத் தெரிவித்தனர்.
- ''அடுத்த ஒலிம்பிக்ஸில் நிச்சயம் என் மகளுக்கு தங்கப் பதக்கம் பெற குருவாயூரப்பன் அருள் புரிவார்'' என்கிறார் உஷாவின் அம்மா லட்சுமி அம்மாள், நம்பிக்கையுடன்.
- ஜாகர்தா வெற்றிக்குப் பாராட்டுத் தெரிவித்து கேரள அரசு, உஷாவுக்கு இரண்டு லட்ச ரூபாயில் வீடு கட்டித் தரவிருக்கிறது.



உஷாவின் பெற்றோர்.

கல்கி: வணக்கம்! சென்ற வாரம் கடைசியாகக் கேட்கப்பட்ட கேள்விக்கு உங்கள் பதிலைக் கல்கி வாசகர்கள் ஆவலுடன் எதிர்பார்த்துக் காத்திருக்கிறார்கள்!

ஆர். எம். வீ.: அது சரி. அதற்கு முன்னால் சென்ற வாரம் வெளிவந்த பேட்டி பற்றி ஓரிரு விஷயங்களைத் தெளிவுபடுத்த வேண்டியிருக்கிறது.

கல்கி: என்ன அது?

ஆர். எம். வீ: முதலில், புரட்சித்தலைவரைப் பற்றி நான் குறிப்பிடுகையில் வெறுமனே பெயரை மட்டும் சொல்லியிருக்க மாட்டேன். நீங்கள் அப்படி எழுதியிருக்கிறீர்கள். இது சரியில்லை. அவரைப் பற்றிச் சொல்லும் போது எப்போதுமே மாண்புமிகு என்றோ பொன்மனச் செம்மல் என்றோ ஏதோ ஒரு அடைமொழி போட்டுத்தான் குறிப்பிடுவேன். நீங்களாகவே எழுதும்போது எப்படி வேண்டுமானாலும் போட்டுக் கொள்ளுங்கள்; அது உங்கள் உரிமை. ஆனால் நானே பேசுவதுபோல் எழுதியிருக்கிறீர்கள். அதனால் சொல்ல வேண்டியிருக்கிறது.

கல்கி: நியாயமான ஆட்சேபணைதான்! அப்புறம்?

ஆர். எம். வீ: பெரியாரைப் பிரிந்து நான் வந்தபோது எனக்குப் 'பெரிய மனுஷனா வளரணும்' என்ற எண்ணம் இருந்ததாகக் குறிப்பிட்டிருக்கிறீர்கள். இது என் சுபாவத்துக்கே ஏற்றதில்லை; அந்த வார்த்தைகளை நான் பிரயோகித்திருக்கவே மாட்டேன்; வாழ்க்கையில் முன்னேற வேண்டும் என்ற ஆவல் இருந்ததால் என்று வேண்டுமானால் சொல்லலாம். சரி, இப்போது இந்த வாரப் பேட்டிக்கு வருவோம். கடைசிக் கேள்வியை மறுபடியும் ஞாபகப்படுத்துங்களேன்....

# வீரப்பனுக்கு



# -பரபரப்பான

கல்கி: எம். ஜி. ஆர். அமெரிக்காவில் சிகிச்சை பெற்றுக் கொண்டிருந்த சமயத்தில், எம். ஜி. ஆருக்கும், ஜானகிக்கும் நடந்த திருமணத்தைக் கூடச் சந்தேகத்திற்குரியது என்று பேசிய அந்த ஜெயலலிதாவைத்தான் எம். ஜி. ஆர். மீண்டும் கொள்கைப் பரப்புச் செயலாளர் ஆக்கியிருக்கிறார். இதற்கு என்ன காரணம்?

ஆர். எம். வீ.: அது மட்டுமா? புரட்சித் தலைவருக்கு 13ம் தேதி இரவுதான் ஸ்ட்ரோக் வந்தது; எல்லோரையும் அதிர்ச்சிக்கு உள்ளாக்கியது. ஆனால் அதற்கு முன்பாகவே மாவட்டச் செயலாளர்களை அவசரமாக அழைத்து மீட்டிங் போட்டவர்தான் ஜெயலலிதா. நாங்களெல்லாம் முதல்வர் உடல் நிலையைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டிருந்த நேரத்தில் இனி அவர் திரும்பி வரவே மாட்டார் என்றும், தான் பதவிக்கு வர வேண்டும் என்றும் கருதி, பிரதமருக்கும் கவர்னருக்கும் தான்தான் வாரிசு என்று கடிதம் எழுதியவர்தான் அவர். அந்தச் சமயத்தில்தான் கடைசித் தொண்டனான வீரப்பன் விழித்துக் கொண்டான். இல்லையேல் கட்சியே சிதறிப் போயிருக்கும்.

கல்கி: இதெல்லாம் முதல்வருக்குத் தெரியுமா?

ஆர். எம். வீ: தெரியாமலிருக்க நியாயமில்லை. இருந்தும் நியமித்திருப்பதற்குக் காரணம் என்ன என்பதற்குக் காலம்தான் பதில் சொல்ல வேண்டும். ஆனால் இந்த விஷயத்தில் நான் மாற்றுக் கருத்துக் கொண்டிருப்பதும் புரட்சித் தலைவருக்குத் தெரியும்.

கல்கி: கடந்த பொதுத் தேர்தலின் போது தேர்வு செய்யப்பட்ட கட்சி வேட்பாளர்களையெல்லாம் நீங்கள் உங்கள் ஆளாகப் பார்த்துத்தான் தேர்வு செய்தீர்கள் என்று ஒரு கருத்து இருக்கிறதே?

ஆர். எம். வீ: அது பைத்தியக்காரத்தனம். மீண்டும் பொன்மனச் செம்மல் தலைமை யிலான ஆட்சி தமிழகத்தில் வர வேண்டும் என்ற எண்ணத்தைத் தவிர வேறு எந்த

# வீழ்ச்சியா?



எண்ணமும் எங்களுக்கு இருந்ததே இல்லை. ஆனால் மற்றவர்கள்தான் அப்போது கோஷ்டி யாகச் செயல்பட்டார்கள். திரை மறைவில் அவர்களுக்கு யாருடன் தொடர்பு இருந்தது? தேர்தலின்போது திருநாவுக்கரசு ஐந்தாயிரத் திலிருந்து இருபத்தைந்தாயிரம் வரை அவருடைய ஆட்கள் மூலம் சிலருக்குப் பிரித் துக் கொடுத்தாரே! அந்தப் பணம் எங்கிருந்து வந்தது? அது யாருடைய பணம்? எதற்காகக் கொடுத்தார்? இதிலிருந்தே தெரியவில்லையா கோஷ்டி வளர்ப்பது யார் என்று?

கல்கி: முன்பெல்லாம் தமிழக இ. காங் கிரஸ்தான் கோஷ்டி சண்டைக்குப் பேர் போனதாக இருந்தது. ஆனால் இப்போது, அ. இ. அ. தி. மு. க. அதைக் கூட விஞ்சும் அளவுக்குக் கோஷ்டிகளாகி விட்டதே! இது கட்சி வளர்ச்சிக்கு நல்லதுதானா?

ஆர். எம். வீ: சில சமயங்களில் நோய் வருவதுகூட உடம்புக்கு நல்லதாக முடியும். அது போன்றதுதான் இதுவும்!

கல்கி: என்ன கோஷ்டிச் சண்டை இருந் தாலும் நீங்கள் ஜெயலலிதாவைப் பூலான் தேவி என்றெல்லாமா பேசுவது?

ஆர். எம். வீ: நான் ஒன்றும் ஜெயலலி தாவை 'பூலான் தேவி' என்று பேசவில்லை.

## சென்ற இதழ் தொடர்ச்சி...

'ஜெயலலிதாவுக்குத்தான் கூட்டம் கூடு கிறது. ஆகவே அவரைத்தான் தலைவராக ஏற்றுக் கொள்ள வேண்டும்' என்று மக்கள் குரலில் டி. ஆர். ஆர். எழுதினார். அதற்குப் பதில் சொல்வதற்காகத்தான் ஒரு பத்திரிகை வெளியீட்டு விழாவில் யாருடைய பெயரை யும் குறிப்பிடாமல், 'கூட்டம் சேருகிறது என் பதற்காக ஒருவரைத் தலைவராக்கிவிட முடி யாது' என்பதை உணர்த்த உதாரணமாகக் குறிப்பிட்டேன்; 'பூலான் தேவிக்குக் கூடத் தான் கூட்டம் கூடுகிறது. அதற்காகப் பூலான் தேவியைத் தலைவராக்க முடியுமா?' என்று பேசினேன். அப்போதும் நான் ஜெயலலிதா வைப் பெயர் சொல்லிச் சொல்லவில்லை.

கல்கி: உங்களுக்கு எதிராக—அதாவது உங்கள் கட்சியை விமர்சித்துப் பத்திரிகை கள் எழுதினால் உடனே அந்தப் பத்திரிகைக்கு அரசு விளம்பரத்தை நிறுத்திவிடுகிறீர்கள். முன்பு அப்படித்தான் 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' பத்திரிகைக்கு விளம்பரத்தை நிறுத்திவிட்ட தாகச் சொன்னார்கள். ஏன் உங்களை விமர் சிக்கும் உரிமை கிடையாதா என்ன?

ஆர். எம். வீ: உண்மையில் நாங்கள் விமர் சனங்களை வரவேற்கிறோம். ஆனால் பொய் களை எழுதினால் எப்படிப் பொறுத்துக்கொள் வது? நீங்கள் கத்தியை எடுத்து என்னைக் குத்துவீர்கள். நானே அதே கத்தியை எடுத்து மீண்டும் உங்களிடம் தரவேண்டுமா? எப்படித் தருவேன்? கல்கியில்கூட நான் முதல்வர் பதவியை ஏற்றுக் கொள்ளத் தயார் என்று பேசியதாக 'ஸ்பாட் லைட்' பகுதியில் போட் டிருக்கிறீர்களே, கல்கியில் இப்படிப்பட்ட தொரு பொய்யான செய்தி வெளிவரலாமா?

கல்கி: ஒரு நாளிதழில் நீங்கள் பேசியதாக வெளி வந்திருந்த செய்தியைத்தானே எடுத்துப் போட்டோம்!

ஆர். எம். வீ: சில நாளிதழ்கள் பொய்யை வெளியிடுகின்றன. அதையெல்லாம் எடுத்துப் போடுவதா?

கல்கி: அது பொய் என்றால் அந்த நாளிதழுக்கு நீங்கள் மறுப்புத் தெரிவித்திருக்கலாமே?

ஆர். எம். வீ: சில நாளிதழ்களை நான் ஒரு பத்திரிகையாகவே மதிப்பதில்லை. அதனால்தான் நான் மறுப்பும் சொல்வதில்லை.

கல்கி: உங்கள் அக்காள் மகனுக்கு நீங்கள் சலுகை காட்டியதாகக் கருணாநிதி முரசொலியில் எழுதியிருந்தாரே?

ஆர். எம். வீ: என் அக்காள் மகன் துரைராஜ் சுற்றுலாத் துறையில் ஆராய்ச்சி செய்து டாக்டர் பட்டம் வாங்க இருக்கிறான். முதலில் சுற்றுலா அதிகாரிக்குத் தேர்வு நடந்தபோது, அவனுக்குத் தகுதியிருந்தும் அவனைத் தேர்ந்தெடுக்காமல் வேறொருவரைத் தேர்ந்தெடுத்தேன். அதனாலேயே அவனுக்கு என் மீது கோபம். பிறகு புரட்சித் தலைவர்தான் அடுத்து நடந்த தேர்வின்போது அவனைத் தேர்ந்தெடுத்தார். நான் அதில் தலையிடவேயில்லை. அவன் வந்த பிறகுதான் சென்னையிலுள்ள தமிழ்நாடு சுற்றுலா ஹோட்டலின் வருமானம் அதிகரித்திருக்கிறது. இதில் எங்கே முறைகேடு?

கல்கி: 'இன்னும் வீரப்பன் விட்டு வைத்துள்ள காடுகள் இருக்கின்றன' என்று கருணாநிதி பேசிக் கொண்டிருக்கிறாரே.... அது பற்றி என்ன சொல்லுகிறீர்கள்?

ஆர். எம். வீ: அது மட்டுமா? வைரவேல், தங்க வேல் ஆகியவற்றைக்கூடக் காணவில்லை என்றுதான் கருணாநிதி சொல்லிக் கொண்டிருக்கிறார். எதையும் ஆதாரத்தோடு நிரூபிக்க வேண்டாமா? கருணாநிதி ஆட்சிக் காலத்தில் நடந்ததாகப் பேசப்படாத லஞ்ச ஊழல்களா?

கல்கி: திருச்செந்தூரில் சுப்பிரமணிய பிள்ளை மரணம் குறித்து விசாரித்த நீதிபதி பால் அவர்கள் அரசுக்கு எதிரான அறிக்கை கொடுத்ததால்தான் பயந்து கொண்டு அமெரிக்கா சென்றுவிட்டதாகச் சொல்கிறார்களே? அறிக்கை மீது என்ன நடவடிக்கை எடுத்தீர்கள்?

ஆர். எம். வீ: பால் அறிக்கை என்ன சொல்கிறது? தற்கொலை என்பதில் சந்தேகம் இருக்கிறது. அதனால் மாநிலக் குற்றப் புலனாய்வுத் துறை விசாரிக்க வேண்டும் என்று சொல்லுகிறது. விசாரித்ததில் யார் மீதும் குற்றமில்லை என்று தெரிய வந்தது. அதனால்தான் நடவடிக்கை எடுக்கவில்லை.

கல்கி: சரி, அதைவிட்டுவிடுவோம். பழையபடி கட்சி விஷயத்திற்கே வருவோம். சமீபத்தில்கூட நீங்கள் திருநாவுக்கரசை, 'மைனர் தம்பி' என்று சொல்லியிருக்கிறீர்களே...?

ஆர். எம். வீ: ஆமாம். மற்றவர்களையெல்லாம் சைபர்களாக்கி அந்த சைபர்களைப் போட்டால்தான் ஒன்றுக்கே அதிக மதிப்பு என்று புரட்சித் தலைவரையே ஒன்று என்று மரியாதையைக் குறைத்துப் பேசினால் எப்படி நான் பதில் சொல்லாமல் இருக்க முடியும்? இதைக் கூட நான் பொதுக் கூட்டத்தில் கூறவில்லை. பெயர்சொல்லியும் குறிப்பிடவில்லை.

கல்கி: எம். ஜி. ஆர். அமெரிக்காவில் இருந்தபோது இங்கே மோகன்தாஸ் மாற்றப்பட்டதற்கு நீங்கள்தான் காரணம் என்று சொல்லப்பட்டதே?

ஆர். எம். வீ: இதுவும் எவ்வளவு அநியாயமான குற்றச்சாட்டுப் பாருங்கள். இந்தத் துறைக்கும் எனக்கும் சம்பந்தமேயில்லை. நாவலர்தான் அந்தத் துறைப் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருந்தார். இது பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. நாவலர்தான் அந்த உத்தரவைப் போட்டார். அதன் பிறகுதான் எனக்கே தெரியும். பின்னர் நான் விசாரித்தபோது, முதல்வருடைய ஒப்புதலின் பேரில்தான் அந்த உத்தரவு போடப்பட்டதாக நாவலர் சொன்னார். இதை நான் மோகன்தாஸிடமே கூறியிருக்கிறேன்.

கல்கி: சிறுவயதில் பெரியார் கொள்கைகளால் கவரப்பட்ட நீங்கள் இப்போது எதிர்க்கட்சிக்காரர்களால் 'வீரப்ப ஆழ்வார்' என்று சொல்லும் அளவுக்கு மாறியுள்ளீர்களே அதற்கு என்ன காரணம்?

ஆர். எம். வீ: அண்ணாவேகூட 'ஒன்றே குலம்; ஒருவனே தேவன்' என்று திருமந்திர வாக்கியத்துக்கு வந்துவிட்டார். நான் சிறு வயதில் டி. கே. எஸ். நாடகக் குழுவில் இருந்தபோது, நாராயணப் பிள்ளை என்ற சுயமரியாதைக்காரரோடு பழகியதால் இளமை வேகத்தில் எனக்கும் அதில் ஈடுபாடு வந்துவிட்டது. அதன்பிறகு, மெல்ல மெல்ல அனுபவப்பட்டு, அறநிலையத்துறை அமைச்சரான பிறகு நாத்திகம் என்பது தனி மனிதக் கொள்கை; சமுதாயக் கொள்கை அல்ல. கடவுள் நம்பிக்கை இருந்தால்தான் சமுதாய ஒழுக்கம் இருக்க முடியும் என்ற

- போபால் விஷவாயு மரணங்கள்:

கடமையில் தவறிய டாக்டர்கள்!

— அதிர்ச்சி தரும் அறிக்கை

அடுத்த இதழில் விவரங்கள்...



# உங்கள் குழந்தையின் சீரான வளர்ச்சி, முதல் ஆண்டில் அவன் பெறும் ஊட்டத்தைப் பொறுத்துள்ளது.



## பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு

### அவனது வளர்ச்சிக்குத் தேவையான ஊட்டச்சத்துக்கள் அனைத்தும் நிரம்பியதாகும்

பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு, உங்கள் குழந்தையின் ஊட்டச்சத்துத் தேவைகளை மனதில் கொண்டு விசேஷமாகத் தயாரிக்கப்பட்டுள்ளது.

ஃபாரெக்ஸ் புரதம் செறிந்தது, கூடுதல் இரும்புச்சத்து உள்ளது, சரியான விகிதத்தில் கால்ஷியமும் ஃபாஸ்ஃபரஸும் அடங்கியது. குழந்தையின் வளர்ச்சிக்கு இவை அத்தியாவசியமாகும்.

ஏறக்குறைய நான்காவது மாதம் முதல், குழந்தைக்குப் பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு கொடுங்கள். அவன் ஆனந்தமாக வளருவதைக் காணுங்கள்.




*பாசத்துடன் வழங்குவோர் க்ளாக்ஸோ!*

ஏற்கெனவே பால் அடங்கியது

CLARION/B/GX/8/203 - R

முடிவுக்கு வந்தேன். அதனால்தான் மாறிப் போனேன்.

கல்கி: சரி, நீங்கள் சிறுவனாக இருந்த போது உங்கள் அக்காள் குடும்பமே உங்கள் அத்தானின் குடிப் பழக்கத்தால் வீணாகிப் போனதாகச் சொன்னீர்கள். நீங்களே அதை அனுபவித்த பிறகும் இப்போது மதுக் கடைகளைத் திறந்து விட்டிருப்பதை எப்படி ஆதரிக்கிறீர்கள்?

ஆர். எம். வீ: மதுவிலக்குக் கொள்கை என்பது அகில இந்திய அளவிலும் கொண்டு வரப்பட வேண்டிய ஒரு விஷயம். ஒரு மாநிலத்தில் மட்டும் அதை அமுல்படுத்திவிட முடியாது. அதனால் ஆற்றோடு சென்றுதான் கரையேற வேண்டும் என்று முடிவு செய்திருக்கிறார் முதல்வர். என்ன செய்வது? நாம் ஏற்றுக் கொள்ள முடியாத சில விஷயங்களையும் சில சமயங்களில் சகித்துக் கொள்ளத் தான் வேண்டியிருக்கிறது.

கல்கி: உங்கள் மணி விழாவுக்கு ஜெயலலிதா நேரில் வந்திருந்தாரே!

ஆர். எம். வீ: இப்போதிருக்கும் அரசியல் சூழ்நிலையில் எங்களுக்கிடையில் கருத்து வேறுபாடு எதுவும் இல்லை என்று மற்றவர்களுக்குக் காட்டுவதற்காகவே அவர் வந்திருக்கலாம். அவர் வருவாரென்று நானும் எதிர்பார்க்கவில்லை. அவர் வந்ததனால் எனக்குள் எந்தவிதமான அபிப்ராயமும் இல்லை. வராமல் இருந்திருந்தாலும் நான் கவலைப் பட்டிருக்கப் போவதில்லை.

கல்கி: அவர் மீண்டும் கொள்கை பரப்புச் செயலாளர் ஆகியிருப்பதாலும், உங்களுடைய இலாகா ஒன்று பறிக்கப்பட்டிருப்பதாலும், உங்களுடைய அரசியல் செல்வாக்கு குறைந்து வருவதாகச் சொல்லலாமா?

ஆர். எம். வீ: என் இலாகா எடுக்கப்பட்ட பிறகும்தான் எனது பிறந்த நாளன்று கூடிய கூட்டம் அந்தப் பக்கம் வாணீமகாலிலிருந்து இந்தப் பக்கம் வள்ளுவர் கோட்டம் வரை இருந்ததாகச் சொன்னார்கள்.

கல்கி: ஆகவே இதிலிருந்து உங்களுக்கு வீழ்ச்சி இல்லை என்று கருதுகிறீர்களா?

ஆர். எம். வீ: அது உங்கள் முடிவு.

கல்கி: உங்கள் இலாகா ஒன்று பறிபோனது பற்றி எம். ஜி. ஆரிடம் உங்களுக்கு வருத்தம் ஏதும் இல்லையா?

ஆர். எம். வீ: நான்தான் ஆரம்பத்திலேயே அமைச்சர் பதவிகூட வேண்டாமென்று சொன்னவனாயிற்றே! பிறகு இலாகா பறிப்பில் என்ன வருத்தம் இருக்க முடியும்?

கல்கி: இப்போது எம். ஜி. ஆரின் பேசும் சக்தி எந்த அளவுக்குத் திரும்பியிருக்கிறது என்று சொல்ல முடியுமா?

ஆர். எம். வீ: என் பிறந்த நாள் அன்று காலையில் நான் அவரைச் சந்தித்தபோதுகூட, 'எல்லாம் நீங்கதான்' என்றார். அதற்கு நான், 'நீங்கள் இடும் கட்டளையை நான் நிறைவேற்றுவேன்' என்று சொன்னேன். அவர் நினைப்பதை அடுத்தவருக்கு அப்படியே வெளிப்படுத்தும் சக்தி அவருக்கு இருக்கிறது. பொதுக்கூட்டங்களில்தான் இப்போதைக்குத் தொடர்ச்சியாகப் பேச முடியாது; அவ்வளவுதான்!

கல்கி: கடைசியாக ஒரு கேள்வி. உங்களிடமிருந்து செய்தி, விளம்பரத்துறை எடுக்கப்பட்டிருக்கலாம். ஆனால் அறநிலையத் துறை இன்னமும் உங்களிடம்தான் இருக்கிறது. எங்கள் நோக்கில் இன்றையச் சூழ்நிலையில் செய்தி—விளம்பரத்துறையை விடவும் அறநிலையத்துறை மிகவும் முக்கியமானது என்று கருதுகிறோம். முதன்முறையாக நலிவுற்றிருக்கும் கோயில்களுக்கு உதவுவதற்கென்றே ஒரு பெருந்தொகையை வைப்பு நிதியாக ஏற்படுத்தி அதிலிருந்து வரும் வட்டியைப் பயன்படுத்தத் திட்டமிட்டுச் செயல்பட்டு வருகிறீர்கள். அறநிலையத்துறையில் இது தவிர நீங்கள் சாதித்துள்ளது பற்றி சுருக்கமாகச் சொல்ல முடியுமா?

ஆர். எம். வீ: உங்கள் கேள்வி சரியான கேள்வி. அறநிலையத்துறைக்கு அமைச்சராக சுதந்திரம் பெறுவதற்கு முன்பும் பெற்ற பின்பும் பல பெரியவர்கள் இருந்திருக்கிறார்கள். புரட்சித் தலைவர் ஆட்சிக்கு வந்த பிறகும் ஓர் ஆண்டுக் காலம் அவரேதான் வைத்திருந்தார். அதிலிருந்தே இத்துறையின் முக்கியத்துவத்தை நாம் உணர முடிகிறது. ஓராண்டுக்குப் பின்னர்தான் என்னிடம் தரப்பட்டது. நான் பொறுப்பேற்ற இந்த ஏழு ஆண்டுகளில் தமிழகத்தின் ஆஸ்திக வரலாற்றில் ஒரு மிகப் பெரிய மாறுதலை இத்துறை மூலம் செய்ய முயன்றிருக்கிறேன் என்பதை எல்லோரும் ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். வணக்கத்துக்குரிய சமய, ஆன்மீகப் பெரியார்கள் பலரும் மனம் திறந்து வெளிப்படையாகப் பாராட்டி இருக்கிறார்கள். அதன் விளைவாக ஆலய வழிபாட்டில், இறை உணர்வில் ஒரு புதிய நம்பிக்கையும் உற்சாகமும் விழிப்புணர்வும் மக்களிடையே ஏற்பட்டிருக்கிறது. அதன் வெளியீட்டாகத்தான் புரட்சித் தலைவர் உடல் நலமற்று சிகிச்சை பெற்றபோது வரலாறு கண்டிராத வகையில் கோடானுகோடி மக்கள் பிரார்த்தனையில் ஈடுபட்டு வேண்டுதலையைச் செலுத்தி, அவர் நலம் பெற வேண்டும் என்று வாழ்த்தினர்கள். தமிழகத்தில் இப்படி ஒரு சம்பவம் இதற்கு முன்னர் கிடையாது. வரலாற்றிலே மன்னர்களுக்குக்கூட இப்படி ஒரு நிகழ்ச்சி நடந்ததாகக் குறிப்பு இல்லை. ஏன், இந்தியத் துணைக் கண்டத்திலேயே இப்படி நடந்ததாக முன் மாதிரி இல்லை. இன்று இந்த அற உணர்வு, ஆன்மீக உணர்வு, இறை உணர்வு புரட்சித் தலைவர் ஆட்சியில் அறநிலையத் துறை மூலம் உருவாக்கப் பெற்றதுதான் என்பதை எல்லோரும் ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். இந்த ஒன்றுதான் எனக்கு மனநிறைவு அளிக்கிற பணியாகும்.

தொகுப்பு: ப்ரியன்.

புகைப்படங்கள்:

(சுபா) ராமகிருஷ்ணன்.


நீங்க ஒண்ணும் கவலைப்படாதீங்க... சீக்கிய பயங்கர வாதிகளை நான் கவனிச்சுக்கறேன்!
பிரிட்டனில் இனக் கலவரம்
தாட்சர்


எங்கே இப்படித் திடீர்னு?
அதிகாரிங்க எல்லாம் சரியா திடீர்ச் சோதனை பண்றாங்களான்னு நீ சரியா திடீர்ச் சோதனை பண்றியான்னு பார்க்கத்தான் நான் திடீர்ச் சோதனை பண்ண வந்திருக்கேன்!


அ.தி.மு.க. பற்றி கடும் விமர்சனம்
பஞ்சாயத்து தேர்தல் உடன்பாடு முயற்சி
இ.காங்கிரஸ் பற்றி கடும் விமர்சனம்



1985 அக்டோபர் 27
மலர் 44 இதழ் 13
குரோதன ஐப்பசி 11

கல்கி



# புரட்சிகளும், புரட்சித் தலைவர் ஆட்சியும்!

பசுமைப்புரட்சி என்ற சொல் நியாயமான முறையில் முதன் முதலாகப் பயன்படுத்தப்பட்டது. அனைத்திந்திய ரீதியில் நாம் உணவு உற்பத்தியில் தன்னிறைவு கண்ட போது! இந்த மாபெரும் சாதனைக்குப் பெருமையெல்லாம் பஞ்சாப் மாநிலத்தையே சேர வேண்டும். தமிழகத்தில் பசுமைப் புரட்சி எப்படி இருக்கிறதென்றால் '40 ஆயிரம் டன் அரிசி போதாது; ஒரு லட்சம் டன்னாகக் கொடுங்கள்' என்று மத்திய அரசிடம் கப்பரை ஏந்தும் நிலையில்தான். ஹெக்டே மனம் வைத்தால்தான் தமிழகத்தின் நெற்களஞ்சியம் (தஞ்சை) நிரம்பும் என்ற நிலைமைதான்.

வெண்மைப் புரட்சி என்ற சொல் முதன் முதலாக குஜராத் மாநிலத்தில் பயன்படுத்தப்பட்டது. அங்கே ஒரு கூட்டுறவுப் பால் பண்ணை தோற்றுவிக்கப்பட்டு அதற்கு முன் பாரதம் கண்டிராத அபார சாதனை நிகழ்த்தியதால் புரட்சி என வர்ணிக்கப்பட்டது. ஆனால் அங்கேயும் கூட பால் உற்பத்தி செய்கிற ஏழை எளிய மக்கள் அதைக் கூட்டுறவு சங்கம் மூலமாக வசதி படைத்தவர்களுக்கு விற்று விடுகிறார்களேயன்றி தங்கள் குழந்தைகளுக்குப் பால் புகட்ட முடியாது ஏழைமையில்தான் உழல்கிறார்கள் என்பதை ஓர் ஆய்வு கண்டறிந்து, அதிர்ச்சியையும் விழிப்புணர்ச்சியையும் அளித்தது. தமிழகத்திலும் இப்படி ஓர் ஆய்வு நடத்தினால் பல பரிதாபங்கள் புரிய வரும்.

தொழில்புரட்சிஎன்றசொல்முதன்முதலாகபிரிட்டனில்தொழில்கள் இயந்திர மயமாக்கப்பட்ட போது பயன்படுத்தப்பட்டது. தமிழகத்தில் நிலவும் கடுமையான மின்சாரப் பஞ்சத்தில் என்ன தொழில் புரட்சியை யார்தான் செய்துவிட முடியும்? அஸ்திவாரமே ஆட்டம் கண்டிருக்கிறது. இந்தத் திடீர் வெட்டு மின்சாரத்துக்குத் தொழிலகங்களும், இல்லங்களும் தரும் கட்டணமோ ஷாக் அடிப்பதாக உள்ளது. தொழில் வளர்ச்சி பெற வேண்டும் என்பதற்காகப் பல திட்டங்கள் தீட்டி நிறைவேற்றப்பட்டு வருவது மெய்தான். ஆட்சியில் இருப்போரின் கடமை இது. ஆனால் இத்திட்டங்கள் போதிய அளவு பலன் தரவில்லை. வேறு பல மாநிலங்களுடன் ஒப்பிடுகையில் நாம் மிகவும் பின்தங்கியே இருக்கிறோம். பெரிய கனரகத் தொழில்கள் அமைக்க மாநில அரசிடம் நிதி வசதி இல்லை. மத்திய அரசையே கைகூப்பி அழைக்கிறது. ஆனால் மத்திய அரசோ, காங்கிரஸ் இங்கே தோல்வியுற்ற பிறகு குறிப்பிட்டுச் சொல்லும்படியான கனரகத் தொழில் எதையும் தொடங்கவில்லை. இதுவும் தவிர, தமிழக அரசு வழங்கும் சலுகைகளும் உதவிகளும் மற்ற மாநிலங்களை விடவும் குறைவாக இருப்பதால், தனியார் துறையிலும் அதிக அளவில் புதிய தொழிலகங்கள் உருவாகவில்லை. போதாக்குறைக்கு அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாயுள்ள லஞ்ச ஊழல் வேறு! ஆக மொத்தம், தொழில் வளர்ச்சி இங்கே ஜெட் வேகத்தில் அல்ல; மாட்டு வண்டி வேகத்தில்தான் நடக்கிறது.

தமிழகத்தில் ஆர். வி. காலத்திய தொழில் வளர்ச்சி வேகத்தை நாம் திரும்பவும் பெற வேண்டுமானால் பொதுஜனத் தொடர்பு என்று கூறப்படுகிற அமைப்பு வலுப்பெறவேண்டும். அதன் மூலம் பிற மாநிலங்களில் உள்ள செல்வந்தர்கள் இங்கே முதலீடு செய்யுமாறு வருந்தி அழைக்கப்பட வேண்டும். இந்த விஷயத்தில் தமிழகம் இதுவரை படுதோல்வியே அடைந்திருக்க, குஜராத்தும் மகாராஷ்டிரமும் முன்னணியில் நிற்கின்றன.

இவையெல்லாம் இந்த இதழில் 62—ம் பக்கக் கடிதம் எழுதியுள்ள சுலோசனா சம்பத்துக்கு ஒருவேளை தெரியாமலிருக்கலாம். ஆனால் தொழில், பொருளாதார வல்லுனர்கள் நன்கு அறிந்திருக்கிறார்கள்.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்.

# திருப்பதி வேங்கடாஜலபதிக்கு வைரக் கிரீடம் செய்வது...?



குற்றச்சாட்டு

இவரா...?

இவரா...?

* ஆர். சுப்பராவ், திருக்கோவலூர்.

**? பண்ருட்டியார் மறுப்புத் தெரிவித்த பிறகும் தாங்கள் வருத்தம் தெரிவித்துக் கொள்ளாமல் 'ஒரு கேள்விக்குப் பதில் கூறப்பட்டது' என்று மொட்டைதாதன் குட்டையில் விழுந்தான் என்னும் முறையில் பதில் அளித்து விட்டு நழுவியிருப்பது பத்திரிகை தர்மம் ஆகுமா? பத்திரிகைக் கடமை ஆகுமா?**

! அமைச்சர் மறுப்புத் தெரிவித்துவிட்டதாலேயே நாங்கள் வருத்தம் தெரிவித்தே ஆக வேண்டும் என்று எந்த அடிப்படையில் கோபப்படுகிறீர்கள் நண்பரே?

எங்கள் மேல் அவர் கூறியுள்ள குற்றச்சாட்டு, தான் அப்படிப் பேசவே இல்லை; அவர் மேல் எங்களுக்குள்ள பொல்லாங்கு உள்ளத்தால் நாங்களாகவே அப்படி ஒரு கேள்வியை எழுதிக்கொண்டு பதில் சொல்லியிருக்கிறோம் என்பது!

அவர் அப்படிப் பேசியது நாளிதழில் வந்தது மட்டுமல்ல; அதைப் படித்துவிட்டு அ. தி. மு. க. காரர்களே அதைப் பெருமையோடு மேடைகளில் முழங்குகிறார்கள்' அதைக் கேட்டுவிட்டுத்தான் தராசு பதிலுக்காகக் கேள்வி எழுதி அனுப்பினேன்' என்று கேள்வி எழுப்பிய அதே வாசக அன்பர் எங்களுக்குக் கடிதம் எழுதித் தெரிவித்திருக்கிறார். தவிரவும், நாங்கள் பதிலளித்த அதே அர்த்தமுள்ள ஒரு கேள்விக்குத் 'துக்ளக்' கில் 'சோ'வும் பதில் அளித்திருக்கிறார்.

'தராசு பதில்கள்' பகுதியில் வெளியாகும் எல்லாக் கேள்விகளும் வாசகர்களிடமிருந்து வரும் கேள்விகள்தானா என்பதில் அமைச்சருக்குச் சந்தேகம் இருந்தால் எப்போது வேண்டுமானாலும் எங்கள் அலுவலகத்திற்கு வந்து சரிபார்த்துக் கொள்ளலாம். இந்த நிலையில் வருத்தம் தெரிவிப்பது என்ற பேச்சுக்கே இடமில்லை. எங்களுக்குப் பொல்லாங்கு உள்ளம் இல்லை என்பதையே மீண்டும் வலியுறுத்த விரும்புகிறோம்.

* கே. வி. நாதன், நெய்வேலி—3.

**? 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' பத்திரிகைக்குக் கிடைத்த வெற்றி (சுப்ரீம் கோர்ட் தீர்ப்பு) குறித்துத் தங்கள் கருத்து என்ன?**

! அதிகாரங்களைக் கையில் வைத்துக் கொண்டிருக்கும் போது என்ன ஆட்டம் வேண்டுமானாலும் ஆடலாம் என்று நினைத்துக் கொண்டிருக்கும் ஜக்மோகன்களுக்குக் கிடைத்திருக்கும் மரண அடி அது!

* எஸ். ராமநாதன், திருநெல்வேலி—11.

**? எட்டுக்கோடி ரூபாய் செலவில் திருப்பதி வேங்கடாஜலபதிக்கு வைர கிரீடம் செய்வது பற்றி...?**

! நம்மிடமிருக்கும் 'நான்,' 'எனது' என்னும் அகந்தையைத்தான் நாம் இறைவனிடம் சமர்ப்பிக்க வேண்டும். அதைத்தான் ஆண்டவனும் நம்மிடமிருந்து எதிர்பார்க்கிறானே தவிர வைரக்கிரீடங்களை அல்ல! அந்த எட்டு கோடி ரூபாயை மூலதனமாகக் கொண்டு ஒரு தொழில் தொடங்கிப் பலருக்கு வேலை வாய்ப்பளித்தால் அந்த வேங்கடாஜலபதி இன்னும் அதிக சந்தோஷப்படுவார். நமது உள்ளங்களைத்தான் அவர் கேட்கிறார், வைரங்களை அல்ல.

* என். இளங்கோவன், சித்தலவாய்.

**? ஊழல் இல்லாத அரசாங்கப் பிரிவு எது?**

! விடுமுறை நாட்களில் எந்தப் பிரிவிலும் ஊழல் இல்லை என்று பதில் சொல்ல நினைத்தாலும், 'விடுமுறை நாட்களிலும் வீட்டிலிருந்து கொண்டு லஞ்சம் வாங்குகிறார்களே, என்று யாராவது சண்டைக்கு வருவார்கள். எதற்கு வம்பு?

* க. தியாகராசன், நெய்வேலி—2.

? அரசியல் கட்சியை ஜனநாயக அடிப்படையில் முறைப்படி தேர்தல் வைத்து நடத்துவதற்கும், வெறும் நியமனங்களைக்கொண்டே நடத்துவதற்கும் என்ன வேறுபாடு?

! தி. மு. க. வுக்கும் அ. இ. அ. தி. மு. க. வுக்கும் உள்ள வேறுபாடுதான்! அதாவது, தி. மு. க. மாதிரி உள்கட்சி ஜனநாயக முறைப்படி சம்பந்தப்பட்டவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டால் கட்சிக்குள் பூசல்கள் இருக்காது. இ. காங்கிரஸ் அல்லது அ. இ. அ. தி. மு. க. மாதிரி நியமனம் செய்யப்பட்டால் பூசல்கள் எப்படித் தலைவிரித்து ஆடும் என்பதுதான் உங்களுக்கே தெரியுமே!

* த. சத்தியநாராயணன், அயன்புரம்.

? ஹோட்டலில் சர்வர் பரிமாறுதல், வீட்டில் மனைவி பரிமாறுதல் இரண்டிற்கும் உள்ள வித்தியாசம்?



* இசகம்

* ...இவர்!

தாயின் பரிமாறலுக்கும், மனைவியின் பரிமாறலுக்கும் உள்ள வித்தியாசத்தைக் கேட்கவில்லையே, அதனால் தைரியமாகப் பதில் சொல்லலாம். ஹோட்டலில் காட்டப்படும் கனிவும், அன்பும் இயந்திரத்தனமானவை—போலித்தனமானவை. வீட்டில் காட்டப்படும் அன்பும் கனிவும்தான் நிஜமானவை. ஆனாலும் அனைவருக்கும் அப்படியொரு அன்பான மனைவி கிடைத்துவிடுவதில்லையே... என்ன செய்வது?

* கே. சீனிவாசன், ஈரோடு—3.

? அளவுக்குமீறிக்குடித்துவிட்டுத்தெருவில் கிடக்கும் குடிகாரர்களின் நிலைமைக்குக் காரணம் அரசா? அறிவீனமா?

! அறிவீனமான அரசு.

* என். உலகநாதன், லால்குடி.

? இலங்கைப் பிரச்னையில் கலைஞரின் அணுகுமுறை, எம். ஜி. ஆரின் அணுகுமுறை—யாருடையது உம்மைக் கவர்ந்தது?

! இரண்டும் அல்ல; தெருவின் பேரனுடைய அணுகுமுறைதான்.

* எஸ். எஸ். மணி, திருவனந்தபுரம்.

? துணை ஜனாதிபதி ஆக வேண்டும் என்ற ஆசை நெடுஞ்செழியனுக்கு வந்திருப்பது பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

! கூடிய சீக்கிரம் அ. இ. அ. தி. மு. க. உடையப் போகிறது; அப்போது அவர் இ. காங்கிரஸில் சேர்ந்து விடுவார் என்பதைத்தான் இப்படிச் சூசகமாகச் சொல்லியிருக்கிறாரோ என்னவோ! ஆனால் அப்படிச் சேர்ந்தாலும் அவர் துணை ஜனாதிபதியாவதென்பது சாத்தியமல்ல.

* அன்பு மதியழகன், கோப்பம்பட்டி.

? பாகிஸ்தான் நிஜமாகவே அணுகுண்டு தயாரிக்கும்போது நாம் சும்மாவாகிலும் 'பாச்சா' காண்பித்தால்தானே அவர்கள் அடங்கி இருப்பார்கள்? இதைக் கல்கி கண்டித்ததேன்?

! அணுகுண்டுக்குப் பதில் அணுகுண்டுதான் என்றால் கடைசியில் யாருமே மிஞ்சியிருக்க மாட்டோம். பாகிஸ்தானின் அணுகுண்டுத் தயாரிப்புக்கு எதிராக நாம் இரண்டு காரியங்கள் செய்யலாம். ஒன்று: பாகிஸ்தான் அணுகுண்டு தயாரிப்பின் இறுதி நிலையில் நாம் அந்தத் தொழிற்சாலையையே முன்னெச்சரிக்கையாகத் தாக்கித் தகர்த்துவிடுவது. இரண்டாவது: உலக நாடுகளைக் குறிப்பாக அமெரிக்காவை வற்புறுத்தி பாகிஸ்தானை அணுகுண்டு தயாரிக்காமல் இருக்கச் செய்வது. நாம் முன்னதைக் கடைப்பிடித்தால் போருக்கும் தயாராய் இருக்க வேண்டும். அதற்கு இரண்டு நாடுகளின் பொருளாதாரமும் ஒத்துக் கொள்ளாது. பின்னதுதான் அதாவது தோழமை உணர்வோடு கைகோர்த்துக் கொள்வதுதான் எப்போதுமே சிறந்த வழி.

* ச. இலக்கியநாதன், சைதாம்பாள்புரம்.

? பத்திரிகை தர்மம் என்றால் என்ன?

! அன்னசாலைக்கு அமிஞ்சிக்கரை சொல்லிக் கொடுத்துக் கொண்டிருக்கிறதே, அதுவாக இருக்கலாம்!

* ஆர். எம். வடுகநாதன், வேதாரண்யம்.

? வளர்ந்து வரும் எழுத்தாளர்களிடம் தாங்கள் காணும் குறைபாடுகள் யாவை?

! எழுத்திலா? வாழ்க்கையிலா? இரண்டுமே மன்னிப்புக்குரியவைதான். ஆனால், வளர்ந்துவிட்ட பிறகும் குறைகள் உள்ளனவே, அதுதான் அசிங்கம்.

* ரூ. 10 பரிசு பெறுபவர்:
கே. வி. நாதன்,
C—46, பொன்னியார் சாலை,
வட்டம்—25,
நெய்வேலி—3.



வட்டமேஜை

# எவ்வளவு லஞ்சம் வாங்கினார் தராசு?

**கோகுலமா என்ன?**

* பேரறிஞர் அண்ணாவால் பெரிதும் பாராட்டப் பட்ட, ஈடுபற்ற எழுத்தாற்றலும், தனி நடையும் கொண்ட சிறந்த எழுத்தாளர் திரு. ரா. கணபதி அவர்கள்.
சின்னக் குழந்தைகளுக்குப் புரியாமல் அவர் என்ன கோகுலத்திலா எழுதுகிறார்? அபத்தம்!

சென்னை—13, ந. அம்பிகாபதி.

**உண்மைதான்!**

* ரா. கணபதியின் உரைநடை புரியவில்லை என்பது பலசாலி பக்தர்களின் குறைபாடு என்பது உண்மையே!

திருச்சி—22, ஏ. ஜெகந்நாதன்.

**Go ahead**

* காமாலைக் கண்ணனுக்குக் கண்டதெல்லாம் மஞ்சள் என்பதுபோல், அவரவர் நோக்கில் 'கல்கி' எப்படித் தோன்றினாலும், வாசகர்களாகிய எங்கள் நோக்கில், நீங்கள் என்றும் நடுநிலையாளர்தான். Go ahead.

இளங்கார்குடி, கே. பாஸ்கர்.

**அவசியமில்லை!**

* கல்கி இதழின் நேர்மையில் என்றைக்குமே பழுது இருந்ததில்லை — தனிப்பட்ட இனத்தின் துவேஷம் இருந்ததில்லை என்பது அதைவிட மறுக்க முடியாத உண்மை. அப்படி இருக்கையில் இப்படியொரு தலையங்கம் எழுதித்தான் தன்னைக் காட்டிக் கொள்ள வேண்டுமா கல்கி இதழ்?

ப. மூர்த்தி, பெங்களூர்—21.

**எவ்வளவு லஞ்சம்?**

* ஒரே வாசகருக்கு (மயிலாடுதுறை என். செந்தில் குமார்) தராசு பதில்லிவாரந் தவறாமல் பதில் சொல்லப் படுகிறதே. அவர் தராசுக்கு எவ்வளவு லஞ்சம் கொடுத்தார்? நியாயமா சுவாமி!

ஆங்கரை, ஆனந்.

**நேரில் காட்டட்டுமா?**

* ஏதோ சத்துணவு அமைப்பாளர்களெல்லாம் நேர்மையின் சின்னங்கள் என்ற எண்ணத்தில் 'கல்கி'யின் மீது பாய்ந்திருக்கிறார் கல்லைப்பட்டி து. கோவிந்தராஜன். எங்கள் ஊருக்கு அருகிலுள்ள ஓர் ஊரில் ஒரு சத்துணவு அமைப்பாளர் பட்டப் பகலில் மாட்டு வண்டியிலேயே சத்துணவுக் கூட உணவுப் பொருட்களைத் தம் வீட்டுக்கு 'உரிமையோடு' எடுத்துச் செல்வதை அவர் கண்களுக்கு நான் நேரிலேயே காட்டுகிறேன்.

ஸ்ரீமுஷ்ணம், என். சிவசங்கர்.

**உமக்கு நிகர் நீரேதான்!**

* வீரப்ப நாயக்கன்பட்டியின் அவல நிலையைக் கல்கி மட்டுமே படம் பிடித்துக் காட்டியுள்ளது. இக்கிராமங்கள் இந்து மதத்தை அழிப்பதற்கு முன் மதம் காக்கப் படுமா? துணிச்சலான பேட்டிகளை வெளியிடுவதில் கல்கிக்கு நிகர் கல்கிதான்!

விருத்தாசலம்—1, அ. சிவாராவணன்.

**வேதனைக்குரிய விஷயம்!**

* வீரப்ப நாயக்கன்பட்டி ஒரு 'சாம்பிள்'தான். 'மேல் ஜாதி' என்று முத்திரை குத்தப்பட்டவர்கள் எல்லோரும் ஓர் குலம் (மனித ஜாதி) என மனம் மாறினாலொழிய, ஹரிஜனங்கள் இந்து மதத்தை விட்டு மாற்று மதங்களுக்குப் போவதைத் தடுக்க இயலாது. வேதனைக்குரிய விஷயம்.

அத்திமலைப்பட்டு, வி. ஜெயவேலு.

**என்ன தேசமோ இது?**

* ஈரோடு சுடுகாட்டிலுள்ள வெட்டியான் ஆதங்கப் படுவது என்னவோ, கவனிக்கப்பட வேண்டிய ஒன்றுதான். ஆனால், சமீபத்தில், நண்பர் ஒருவர், தகப்பனார் இறந்த போது சுடுகாட்டிற்குச் சென்று பிணத்தை எரிப்பதற்குள்... போதுமடா சாமி; இனி சாவே வரக் கூடாது என நினைக்கும் அளவுக்கல்லவா மாமூல் கேட்டார்கள்! கொஞ்சம் விட்டால் பிணத்திடம் கூட வசூல் செய்திருப்பார்கள்!

ஈரோடு—1, ஸ்ரீ. ரேவதி ப்ரியன்.

* 'தமிழகத்திலுள்ள இலங்கைத் தமிழ் அகதிகளுக்காக பிரிட்டன் மற்றும் ஐரோப்பிய நாடுகளிலிருந்து 32 பெட்டிகள் நிறைய ஆடைகள் அனுப்பி வைக்கப் பட்டன. ஆனால் சுங்கவரி கட்டினால்தான் அவற்றைத் தருவோம் என்று சுங்க அதிகாரிகள் கூறிவிட்டார்கள். இந்த ஆடைகளை அனுப்பி வைத்ததற்கான கட்டணமான 12,000 ரூபாயைத் துணிகள் கொடுத்த நாடுகளே ஏற்றுக் கொண்டன. ஆனால் தற்சமயம் வரிச் சண்டைகளுக்கிடையில், சுங்க அலுவலகத்திலேயே பதினைந்து பெட்டிகள் திருட்டுப் போயிருக்கின்றன!
—இந்தச் செய்தியினை எக்ஸ்பிரஸில் படிக்க நேர்ந்து, மிகவும் மனம் நொந்து போனேன். ஏதாவது நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறதா? இலங்கைத் தமிழருக்காக பந்த், உண்ணாவிரதம் போன்றவற்றைக் கொண்டாடி முடித்த 'சரம்' காய்வதற்குள் இப்படியுமா? என்ன தேசமோ இந்த தேசம்!

திருப்பத்தூர் (ப. மு.), து. ரவி.

(இக்கடிதம் பரிசு பெறுகிறது.)


''அது என் மம்மியும் நானும். மம்மி அழகா இல்லே...
ஓ... அந்த ஸின்த்தால் வாசனை...ம்...''
''இது என் டாடி. நாங்க பிக்னிக்
போனப்போ எடுத்தது...ஆ...
அதே வாசனை.''
''என் கணவரும் நானும். டென்னிஸ்ஸா இல்லே
ஸின்த்தால் நறுமணமா எங்களை ஒன்று சேர்த்தது?''
ஸின்த்தால் நறுமணம். உங்களை
இணைக்கும் இனிய வாசனை.
குடும்பத்தோடு அந்த வாசனையில்
திளைத்து மகிழுங்கள். உங்கள்
பொன்னான நினைவுகள் என்றும்
புத்தம்புது மலராய் மணம் வீசட்டும்.
Godrej
தயாரிப்பு
400 & 100 கிராம்
அளவுகளில் கிடைக்கிறது.
Godrej
CINTHOL
LUXURY
TOILET POWDER

# சித்தரஞ்சனி

சாண்டில்யன்

## 13. தேவி பேசினாள்!

மூன்றாம் ஜாமத்தின் ஆரம்பத்தில் எதிரி மரக்கலத்தின் அறையிலிருந்து சித்தரஞ்சனியை மீட்டுக் கொண்டும், காஷ்டானனை அழைத்துக் கொண்டும் கீழே மிதந்திருந்த படகில் இறங்கி மகாக்ஷத்ரபனின் யுக்தியால் அவனிடம் சிக்கிக் கொண்ட கௌதமி புத்ரன், அஞ்சன்வேல் நதியில் படகு சென்ற போதே நதியின் முகத்துவாரத்தையும், துறைமுக நிலையையும் கவனித்துக் கொண்டே சென்றான். வாசிஷ்டி நதியென்றும் அஞ்சன்வேல் நதியென்றும் பிரசித்தி பெற்ற அந்த மகாநதியின் முகத்துவாரம் இக்கால கணக்குக்குச் சுமார் ஒரு மைல் அகலமிருந்தாலும்*

அதன் முகத்துவாரத்தின் ஒரு பக்கத்தில் மணல் பெரிதாக ஒதுங்கியிருந்ததால் நதியின் அளவு சிறிது குறுகியிருந்ததையும் கவனித்த சாதவாகனன், தங்கள் படகு முகத்துவாரத்தைக் கடந்த உடன் பெரும் சத்தத்துடன் சீறி வந்த அலைகள் அந்த மணல் மேட்டை மறைத்துவிட்டதையும்பார்த்து "இது மிகவும் ஆபத்தான துறைமுகம், எந்த சமயத்திலும் யாரையும் ஏமாற்ற வல்லது" என்று தனக்குள் சொல்லிக் கொண்டான். "பருவக் காற்றுகள், அவற்றையொட்டி எழும் அலைகள், இவற்றின் நுட்பங்களை அறிந்தவர்கள் மட்டுமே அஞ்சன்வேல் கோட்டையை அடைய முடியும்" என்றும் எண்ணமிட்டான். இந்த எண்ணங்களுடன் அஞ்சன்வேல் கோட்டைக்கு வந்தவன் அக்கோட்டையைப் பார்த்ததும் அதிக வலுவில்லாத அந்தக் கோட்டையைப் பலப்படுத்தியிருப்பது நாகபாணனின் வீரர்களேயென்பதையும் புரிந்து கொண்டான். ஆதிகாலத்தில் கட்டப்பட்ட அஞ்சன்வேல் கோட்டை மிகச் சிறிதாக இருந்தபடியால் அதிலிருந்து தப்புவது அதிகக் கஷ்டமில்லையென்பதையும், அப்படி கஷ்டமில்லாத நிலையிலிருந்து ஆபத்து விளைவிக்கும் நிலைக்கு அதைக் கொண்டு வந்திருப்பது மகாக்ஷத்ரபனின் படைபலமேயென்பதையும் உணர்ந்து கொண்டும் அதிலிருந்து தப்பும் மார்க்கத்தைச் சிந்தித்துக் கொண்டும் சென்ற சதகர்ணி அந்த இரவின் நான்காவது ஜாம ஆரம்பத்தில் அறையில் படுத்துக் கிடந்த போதும் அதே சிந்தனையிலிருந்தான்.

இத்தகைய எண்ணங்களுடன் கோட்டையின் மாடி அறையில் படுத்துக் கிடந்த சதகர்ணி, கதவு மெதுவாகத் திறக்கப்பட்டதையும், தலை முதல் கால் வரை பூர்ணமாகப் பெரிய துணியால் தன்னை மறைத்துக் கொண்ட ஓர் உருவம் ஓசைப்படாமல் கட்டிலை நோக்கி வந்ததையும், தனது கையில் ஓலையொன்றைத் திணித்து விட்டுச் சென்றதையும் உணர்ந்து, தீர்க்கமான உறக்கத்திலிருப்பது போலவே நடித்தான். வந்த உருவம் அறையைவிட்டுக்கதவைச் சாத்திக்கொண்டு சென்ற பின்பும் எழுந்திருக்காமல் படுத்தபடியே தனது வலது கையில் திணிக்கப்பட்ட ஓலையைப் பிரித்துச் சாளரத்திலிருந்து வந்த நிலவொளியில் அதைப் படித்தான். "நாளை இரவில் மகாக்ஷத்ரபர் மரக்கலம் அபராந்தாவை நோக்கிப் போகிறது. அதில் உங்களையும் அனுப்ப ஏற்பாடாகியிருக்கிறது" என்று எழுதப்பட்டிருந்தது. அதைப்படித்தகௌதமி புத்ரன் நாளை இரவுக்குள் தப்பாவிட்டால் அப்புறம் தப்புவது குதிரைக் கொம்பு என்று எண்ணினாலும், ஒரு முழு பகலும் இரவில் ஒரு பகுதியும் இருப்பதை நினைத்து, "அதற்குள் ஆயிரம் நிகழ்ச்சிகள் விளையலாம்" என்று தனக்குள் சொல்லிக் கொண்டான். சாளரத்தின் மூலமாக எதிரே பெரிதாக எழுந்து நின்ற தாபோல் மலையையும் அதன் உச்சிகளையும் கவனித்தான். அஞ்சன்வேல் கோட்டைக்கு நேர் எதிர்க்கரையில் குத்துகுத்தாக மலைப்பகுதி இருப்பதைக் கண்டு நதியில் குதித்து நீந்தினாலும் கரையின் குத்துக் கற்கள் மீது ஏறுவது மிக அபாயமென்பதையும் அறிந்தான். ஏதேதோ சிந்தனைக்குப் பிறகு ஏதோ முடிவுக்கு வந்தவனாய் மீண்டும் கட்டிலில் போய்ப் படுத்தவன் சிறிது நேரமாவது உறங்கும் நோக்கத்துடன் கண்களை மூடினான். உறக்கமும் அவனை மெதுவாக ஆட்கொண்டது.

சாதாரணமாகப் பொழுது விடிவதற்கு நீண்ட நேரம் முன்பே எழுந்திருக்கும் பழக்கமுள்ள சதகர்ணி அன்று விடிந்த பின்பும் தூங்கிக் கொண்டிருந்தானாதலால் காலையில் அவனைச் சந்திக்க முயன்ற நாகபாணன் அவன் எழுந்திருக்கவில்லையென்பதைக் காவலரிடமிருந்து அறிந்ததும் தானே

* Sand in the river – bed accumulates, to form a sand-bar across the mouth of the river. Rushing waves make water rise over the bund and a roaring sound is made – Maharashtra State Gazetteer – Ratnagiri Dt. P. 735.



அவனைக் காண மாடி அறைக்கு வந்தான். அங்கு கட்டிலில் சிறிதும் கவலையின்றி உறங்கும் கௌதமிபுத்ரனைக் கண்டதும் மிதமிஞ்சிய வியப்புக்குள்ளானான். தன்னிடம் சிறைப்பட்டிருக்கும் சதகர்ணிக்குத் தூக்கம் எப்படி வந்தது என்பதை நினைத்து ஆச்சரியமடைந்த நாகபாணன் சதகர்ணியைத் தனது கையால் பிடித்து அசக்கினான். அதனால் சற்றே நித்திரை கலைந்த சதகர்ணி ''யார் எழுப்புவது?'' என்று சீறி மறுபடியும் தலையைப் போர்த்திக் கொண்டு மறுபக்கம் திரும்பிப் படுத்தான். அதனால் வியப்பிலிருந்து கோபத்துக்குத் தாவிய மகாக்ஷத்ரபன் இன்னொருமுறை சதகர்ணியை அசைத்து, ''சாதவாகனா! எழுந்திரு. இந்தக் கும்பகர்ணப் பழக்கம் மன்னர்களுக்கு உதவாது'' என்று கூறவும் செய்தான்.

மகாக்ஷத்ரபனின் வலுவான கையால் பலமாக அசைக்கப்பட்டதாலும் அவன் சொற்களாலும் அப்பொழுதே எழுந்தவன் போல் பாசாங்கு செய்து கட்டிலில் உட்கார்ந்து கண்களைக் கசக்கிவிட்டுக் கொண்ட கௌதமிபுத்ரன் கட்டிலின் பக்கத்தில் நின்ற நாகபாணனை நோக்கி, ''சாக மன்னரா! நீங்களா என்னை எழுப்பினீர்கள்? அபசாரம், அபசாரம்'' என்று மன்னிப்புக் கேட்கும் பாவனையில் பேசினான்.

''சதகர்ணி!'' சற்று கடுமையாக எழுந்தது நாகபாணன் குரல்.

''மகாக்ஷத்ரபரே!'' என்று கேட்டு நாகபாணனை நோக்கினான் சதகர்ணி.

''சூரியன் எழுந்துவிட்டான்...'' என்று நாகபாணன் நேரம் அதிகமாகி விட்டதை உணர்த்தினான்.

''நாம் தூங்குவதற்காக அவன் எழுந்திருக்காமலிருப்பானா? அவன் ஒரேயடியாக உறங்கி விட்டால் நீரும் நானும் உலகிலுள்ள உயிரினங்கள் அனைத்தும் வாழ முடியுமா?'' என்று சதகர்ணி கட்டிலில் உட்கார்ந்தபடியே கேள்வியை வீசிப் புன்முறுவலும் செய்தான்.

சதகர்ணியின் சொற்கள் நாகபாணன் வியப்பை உச்சிக்குக் கொண்டு போகவே அவன் கேட்டான் ''நீர் பிராமணன் தானே?'' என்று.

''அப்படித்தான் பிறந்தேன்'' என்றான் சதகர்ணி.

''இப்பொழுது?''

''க்ஷத்திரியனாக மாறிவிட்டேன்.''

''அவ்வப்பொழுது ஜாதியை மாற்ற முடியுமா?''



"தொழிலை மாற்றிக் கொண்டால் ஜாதி தானாகவே மாறுகிறது. தொழிலை வைத்துத் தானே ஜாதி" என்ற சதககர்ணி, "படிப்பு சொல்லிக் கொடுத்தால் பிராமணன், சண்டை போட்டால் க்ஷத்திரியன், வாணிபம் செய்தால் வைசியன்..." என்று சொல்லிக் கொண்டு போனவனைத் தடுத்த நாகபாணன் "உன் விவரணத்தைக் கேட்க நான் வரவில்லை" என்றான்.

"வேறு எதற்கு வந்தீர்கள்? ஓ! என்னை எழுப்ப வந்தீர்களா? மறந்துவிட்டேன். தூங்குபவர்களை எழுப்புவதற்கு இந்தக் கோட்டையில் உஷத்கால (விடியற்கால) வாத்யங்கள் இல்லையா?" என்று கேட்டான்.

"இங்கு கேளிக்கைக்கு வரவில்லை நான். சங்கீதத்துக்கு இங்கு என்ன வேலை?" சீற்றத்துடன் வந்தது நாகபாணன் கேள்வி.

"ஓகோ! எதிர்க்கரையில்தான் வேலையா? ஏன் நாகபாணரே! சித்தரஞ்சனி இங்கு பாடினால் என்ன?", என்று விசாரித்தான்.

"இங்கு அதற்குத் தேவையில்லை."

"ஏன்? நீங்கள் இருக்கிறீர்களே!"

"எதிர்க்கரையில் இருந்த மக்களைக் கிளப்ப அவள் பாடினாள். இங்கு நாங்கள் தானிருக்கிறோம். எங்களைக் கிளப்ப யாராலும் முடியாது." இதைச் சொன்ன நாகபாணன் "சரி சரி! காலைக் கடனை முடித்துக் கொள்" என்றான்.

"நான் நன்றாக நீராடிப் பழக்கம். நதியில் நீராட அனுமதிப்பீர்களா? இல்லை நான் தப்பி விடுவேனென்று அஞ்சுகிறீர்களா?" என்று வினவினான்.

இந்தக் கேள்வியில் விழுந்து விட்டான் மகாக்ஷத்ரபன். "சதகர்ணி! இந்த நாகபாணன் யாருக்கும் எதற்கும் அஞ்சுவதில்லை. இதை உலகம் அறியும். நதியில் நீராடினால் தப்பிவிடலாமென்று நினைக்காதே. நீ நதிக்குள் மூழ்கினால் உன்னைச் சந்திக்க எதிர்க்கரையிலும் எனது வீரர்கள் இருப்பார்கள். இக்கரையிலும் என் வீரர்கள் உன்னைக் கண்காணிப்பார்கள். அது மட்டுமல்ல..." என்று சற்றுப் பேச்சை நிறுத்தினான்.

"வேறு என்ன?" என்று கேட்டான் சதகர்ணி.

"சித்தரஞ்சனி அறையில் அடைத்து வைக்கப்படுவாள் நீ வரும் வரை."

"நான் வராவிட்டால்?"

"அவளை காஷ்டானனுக்கு மணமுடித்து விடுவேன்."

"அவள் என் மனைவி."

"யார் சாட்சி?"

"சண்டிகாதேவி."

"சண்டிகாதேவி பேசுவாளா?"

"அவசியம் வரும்போது பேசுவாள். பேசும் போது என்ன உத்பாதங்கள் உங்களுக்கு ஏற்படுமென்று சொல்ல முடியாது" என்றான் சதகர்ணி.

"உனக்கு?" என்று கேட்டான் மகாக்ஷத்ரபன்.

"பக்தர்களுக்கு எதுவும் ஏற்படாது."

"நீ பக்தனா?"

"ஆம்."

இதைக் கேட்டு நகைத்த நாகபாணன், "சரி சரி! போய் நீராடிவிட்டு வா. தப்ப முயன்று உயிரிழக்காதே. உன் தாய்க்கு நீ ஒரே பிள்ளை என்று கேள்வி. அவளுக்காகவாவது நீ உயிருடன் இருக்க வேண்டும்" என்று சொல்லிச் சென்றுவிட்டான் மகாக்ஷத்ரபன்.

அவன் சென்றதும் சில விநாடிகள் கழித்து உடையில் தன் கோடரியை மட்டும் மறைத்து எடுத்துக் கொண்டு கீழே சென்றவன் அங்கிருந்த காஷ்டானனைக் கண்டு, "காஷ்டானனா! நீ நீராடி ஆகிவிட்டதா?" என்று வினவினான்.

"நான் தூங்குமூஞ்சியல்ல" என்றான் காஷ்டானன்.

"புரிகிறது. நன்றாக விழித்துக் கொண்டிருக்கிறாய்" என்ற சதகர்ணி, "சித்தரஞ்சனியைக் கூப்பிடு" என்றான்.

"நீ பார்க்கக் கூடாது அவளை!"

"ஏன்?"

"நான் அவளை மணம் செய்து கொள்ளப் போகிறேன்."

"நான் இறந்தால்தான் அது முடியும்."

"இன்றிரவு மரணத்தை விட மோசமான நிலையில் இருப்பாய்" என்று கூறிய காஷ்டானன் அவனை விட்டுச் சென்றான்.

அதற்குப் பிறகு அங்கு நிற்காமல் நதிக்கரைக்குச் சென்றுவிட்ட சதகர்ணி நதியில் நன்றாக அமிழ்ந்தும் நீந்தியும் நீராடினான். பிறகு தான் உடுத்தியிருந்த ஆடைகளைப் பிழிந்து அணிந்து கொண்டு ஆதித்ய ஹ்ருதய ஸ்தோத்திரத்தை இரைந்து சொன்னான் கோட்டை வரையில் கேட்கும்படியாக. அவன் கூச்சலைக் கேட்ட கோட்டையிலிருந்த வீரர்கள் உப்பரிகையிலிருந்தும் கோட்டை மாளிகையின் வாயிலிலிருந்தும் வேடிக்கை பார்க்கத் துவங்கினார்கள். இதனால் ஆங்காங்கு பேச்சும் குழப்பமும் ஏற்பட்டதால் சித்தரஞ்சனியும் வெளியில் வந்தாள். ஆற்றங்கரையில் உட்கார்ந்து கதிரவனை இரைந்து துதித்துக் கொண்டிருந்த சதகர்ணியைப் பார்த்த சித்தரஞ்சனி சிந்தனை மிகுந்தவளாய் ஆற்றங்கரைக்கு வந்து அவன் பக்கத்தில் நின்றாள். அவள் வந்ததைக் கவனித்த சதகர்ணி, "சித்தரஞ்சனி! வா!. உட்கார். சண்டிகாதேவியைப் பற்றிப் பாடு" என்றான். அவள் உட்காரத் தயங்கியதும் கையைப் பிடித்து அவளை உட்கார வைத்து, "உம் பாடு" என்று சொன்னதுடன் நிற்கவில்லை அவன். தனது வலது கையை முஷ்டியாகப் பிடித்துக் கட்டை விரலுக்கிடையில் சிறிது துவாரம் விட்டு இடது கையால் முஷ்டியைப் பிடித்துத் தனது வாயால் துவாரத்தில் வலுவாக ஊத குழலூதும் ஒலி கிளம்பியது பலமாக. அதில் சித்தரஞ்சனியின் பாட்டையே ஊதினான் சதகர்ணி. மிகுந்த ஆபத்தான சமயத்தில் அவன் எதற்காகப் பாட்டை ஊதுகிறான் என்ற நினைப்புடன் நின்று கொண்டிருந்த சித்தரஞ்

# காட்பரிஸ்

# போர்ன்விடா






## சுறு சுறுப்புப் பானம்!



"ஒரு டம்ளர் பாலிலே இரண்டு ஸ்பூன் போர்ன்விடா அதுவே சுலமான சுவையான பானம்—அதை, என் குழந்தைகளுக்கு அன்றாடம் இருவேளை தருகிறேன்.

என் குழந்தைகளுக்கு, கோகோ, மால்ட், பால், சர்க்கரை ஆகியவற்றின் போஷாக்கினைத் தருகிறது போர்ன்விடா. அவர்கள் வளரும் காலம் முழுவதும் அவர்களுக்குத் தேவைப்படும் ஊட்டச் சத்தையும் சக்தியையும் அளிக்கிறது. அவர்கள் நல்ல வளர்ச்சி பெறுகிறார்கள். ஆகவே நல்ல வளர்ச்சி. போர்ன்விடா பயிற்சி."

*போர்ன்விடாவின் இனிமைக்காலம். போர்ன்விடா அளித்தவரை பானங்கள் நேசத்தோடு நிறைந்து மகிழும் ஒருநாள்.*

இப்போது மிச்சமாக்கிடுவீர் ரூ. 2/- ஒவ்வொரு சிக்கில் பேக்கிலும்.

OBM/4688/TAM

# அருள் வாக்கு

மூன்று லக்ஷணம் உள்ளவன்தான் 'ஆசார்யன்' என்று வைத்தார்கள். ஒன்று சாஸ்த்ர ஸித்தாந்தத்தை நன்றாகத் தெரிந்து கொண்டிருக்க வேண்டும் (''ஆசிநோதி ஹி சாஸ்த்ரார்த்தம்'') இரண்டு, தெரிந்ததை வாழ்க்கையில் நடத்திக் காட்டும் ஆசாரஸம்பந்தராக இருக்க வேண்டும். (''ஸ்வயம் ஆசரதே''); மூன்று, இப்படித் தனக்குத் தெரிந்து அநுஷ்டிக்கும் சாஸ்த்ரத்தைப் பிறருக்கும் கற்றுக் கொடுத்து அவர்களையும் ஆசார வாழ்க்கையில் நிலைநாட்ட வேண்டும் (''ஆசாரே ஸ்தாபயத் யபி'') தெரிந்து கொண்டு மட்டுமிருப்பவர் 'வித்வான்' — அவருக்கு 'ஆசார்யன்' என்ற ஏற்றம் கிடையாது. கற்றுக் கொடுக்காமல் தான் மட்டும் சாஸ்த்ரோக்தமாய், அதன் தத்துவத்தை உணர்ந்து வாழ்பவரை 'அநுஷ்டாதா' என்றும், இன்னம் உயர்ந்தால் 'அநுபவி' என்றும்தான் சொல்வார்களே தவிர 'ஆசார்யன்' என்று சிறப்பிக்க மாட்டார்கள். வாழ்க்கையில் நடத்திக் காட்டாமல், தெரிந்ததைப் பிறருக்குச் சொல்லிக் கொடுப்பவரை 'ப்ரசாரகர்' என்பதற்கு மேல் சொல்வதற்கில்லை. மூன்றும் சேர்ந்தாலே 'ஆசார்ய' பட்டம்.



கசடறக் கற்றபின் அதற்குத் தக்கபடி ஒருத்தன் வாழ்க்கை நடத்த வேண்டும் — ''நிற்க அதற்குத் தக'' — என்று திருவள்ளுவர் சொன்னார். இப்படித் தான் கற்று, கற்றவழி நிற்பதோடு பிறருக்கும் கற்பித்து, கற்பிப்பதோடு விடாமல் அவர்களும் கற்றவழி நிற்க 'ட்ரெயின்' செய்கிறவன்தான் ஆசார்யன். அப்படியே அநேகர் இருந்து வந்திருப்பதுதான் நமக்குப் பெருமையிலெல்லாம் பெரிய பெருமை.

**—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

---

சனி அவன் ஊதலால் துன்பத்தையே அடைந்தாள்.

குழலூதிய பிறகு எழுந்த சதகர்ணி மேலும் பல விசித்திர செயல்களில் இறங்கினான். கோட்டை வீட்டுக்கு வந்ததும் சித்தரஞ்சனி கொடுத்த மாற்றுடையை அணிந்து கோடரியை மடியில் மறைத்துக் கொண்டு மகாக்ஷத்ரபன் இருக்குமிடத்தைத் தேடிச் சென்றான். அவனை வரவேற்ற மகாக்ஷத்ரபன் ''இன்றைக்கு மிகுந்த உற்சாகத்திலிருக்கிறாய்'' என்றான்.

''உற்சாகமா!'' என்று வினவினான் சதகர்ணி ஏதுமறியாதவன் போல.

''ஆம். சூரிய ஸ்தோத்திரம், பாட்டு எல்லாம் பலம். ஆமாம் குழலூதினாயே ஏது குழல்?'' என்றும் விசாரித்தான்.

''கையே குழல்'' என்ற சதகர்ணி அவன் முன்பே முஷ்டிபிடித்து ஊத ஆரம்பித்தான்.

''போதும் போதும் நிறுத்து'' என்று நாகபாணன் கேட்டும் நிறுத்த மறுத்த சதகர்ணி, மகுடிபோல் ஊதி, ''நீ நாகம்தானே? ஆடு நாகபாணா!'' என்றும் கூறினான்.

மகாக்ஷத்ரபன் லேசாக நகைத்தான். அந்த நகைப்பில் கடுமை இருந்தது. அன்று அவன் வகுத்த திட்டம் பயங்கரமானது. அதிலிருந்து கௌதமிபுத்ரன் தப்ப முடியாதென்பதை நினைத்ததால் மிகுந்த அச்சத்தின் வசப்பட்டாள் சித்தரஞ்சனி. அன்றைய இரவின் பயங்கரத்தைத் தன்னால் தடுக்க முடியுமா என்றும் நினைத்தாள். தடுக்க முடியவில்லை அவளால். அன்றிரவில் முன்னதாகவே படுத்து உறங்கிவிட்டான் சதகர்ணி. யாரும் தன்னை எழுப்ப வேண்டாம் என்றும் கேட்டுக் கொண்டான். அன்று நள்ளிரவில் அவன் அறைக்குள் நுழைந்த இரு வீரர்கள் கட்டிலில் கிடந்தவன் மீது பெரிய போர்வையை வீசினார்கள். அடுத்து இருவரும் படுத்திருந்தவனை அந்தப் போர்வையிலேயே சுற்றிக் கயிறு கொண்டு கட்டினார்கள். படுத்திருந்தவன் முனகலை நிறுத்த மூச்சையும் அழுத்திப் பிடித்தான் ஒருவன். சதகர்ணியைக் கட்டிய அந்த மூட்டை நள்ளிரவு தாண்டியதும், அஞ்சன்வேல் நதியிலிருந்த படகில் பயணம் செய்தது முகத்துவாரத்தை நோக்கி.

படகு போவதைப் பார்த்துக் கொண்டு நதிக் கரையில் நின்ற சித்தரஞ்சனி மயக்கமுற்றுச் சாய்ந்தாள். அவளை நாகபாணன் தனது கைகளால் தாங்கிப் பிடித்தான். ''சதகர்ணி! உனக்குச் சித்தரஞ்சனியுமில்லை, அபராந்தாவுமில்லை. இப்பொழுது உன் சண்டிகா தேவி பேசுவாளா பார்ப்போம்'' என்று கறுவினான்.

தேவி பேசினாள்.

(தொடரும்)

# ஓர் வேண்டுகோள்

சுமார் 300 ஆதரவற்ற குழந்தைகளுக்கு இலவச உணவு, உடை, இருப்பிடம் கல்வி, அளித்து வரும் சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம் ஆண்டு தோறும் தீபாவளி அன்று குழந்தைகளுக்கு புத்தாடைகள், பட்டாசுகள், இனிப்புகள் வழங்கி தீபாவளியை சிறப்பாக கொண்டாட பொதுமக்கள் பண உதவியோ அல்லது பொருளுதவியோ கொடுத்து உதவும்படிக் கேட்டுக் கொள்கிறோம்.



நாங்கள் ஆதரவற்ற குழந்தைகளுக்கு அடைக்கலம் கொடுத்து அவர்களை ஒருபுதியபாதையில்கொண்டுச் செல்லும் ஆசிரமத்தின் அரியதொரு செயலையும், திக்கற்ற முதியோர்களுக்கு அடைக்கலம் கொடுத்து வருவதையும்தாங்கள் அறிந்திருப்பீர்கள் என்று நினைக்கிறோம். எனவே இது சம்பந்தமாக தாங்கள் அளிக்கும் உதவி ஆதரவற்ற குழந்தைகளுக்கும், ஆசிரமத்தில் இருக்கும் முதியோர் இல்லத்தின் ஆதரவற்ற முதியோர்களுக்கும், இல்லக் குழந்தைகளுக்கும் மனமகிழ்ச்சியுடன் தீபாவளி திருநாளைக் கொண்டாட அவர்களுக்கு புத்தாடைகள், பட்டாசுகள், இனிப்புகள் வழங்க ஏதுவாக இருக்கும் என்றுத் தெரிவித்துக் கொள்கிறோம்.

பொது மக்கள் அளிக்க விரும்பும் நன்கொடை பணம், பொருள் எதுவாக இருப்பினும் அக்குழந்தைகளின் நலனை முன்னிட்டு ஏற்றுக் கொள்ளப்படும். பொது மக்கள் தங்களால் இயன்ற உதவியை பணம் அல்லது பொருட்களாக, நிர்வாகி, "சிவானந்த குருகுலம், நெ. 20, கம்பர் தெரு, கிழக்கு தாம்பரம், சென்னை 600059" என்ற விலாசத்திற்கு அனுப்பி வைக்குமாறுக் கேட்டுக் கொள்கிறோம்.

செயலாளர்.

# அடைக்கலம்

"தாத்தா... இங்க ஒரு ஆளு ஓடியாந்தானு?''

திண்ணையில் குந்தியிருந்த கிழவர், மூக்குக் கண்ணாடியை இடது கையால் தூக்கிப் பிடித்தவாறு, பார்வைக் குவியத்தைச் சரி செய்து கொண்டே தலை நிமிர்ந்தார்.

எதிரில் பதற்றத்துடன் கோபாவேசமாக நான்கு இளைஞர்கள் எல்லாரும் இருபது வயதுக்குள்.

''யாருப்பா நீங்கள்லாம்? என்ன கேட்டீங்க...?'' கைவிரல்களை ஒன்று சேர்த்துக் குவித்து, வலது காதின் மடலை முன்னுக்குத் தள்ளிக்கொண்டே கூர்ந்து கேட்டார் கிழவர்.

''இந்தப் பக்கம் ஒரு ஆளு ஓடியாந்தானுன்னு கேட்டோம்...''

''ஆமாம் தாத்தா... தாடி வைத்துக்கிட்டு, தலையில சும்மாடு கட்டிக்கிட்டு இருப்பான்'' மற்றொரு இளைஞன் விளக்க முயன்றான்.

அவனைத் தடுத்த கிழவர், ''அட! நீ ஒண்ணுப்பா, தாடி கீடின்னுகிட்டு... அவன் யாரு? ஒரே வார்த்தையில ஒரு 'சீக்கியன்'னுட்டுப் போவியா...?'' என்றார்.

''ஆமாம் தாத்தா... அந்தச் சீக்கியனைத்தான் தேடுறோம்...''

''சீக்கியனையா? எதுக்குப்பா...? நீங்கள்லாம் வந்திருக்கிற வேகத்தைப் பார்த்தா... அந்த ஆளு அகப்பட்டா, அவனை அடிச்சே கொன்னுடுவீங்க போல இருக்குதே...!''

''ஆமாம் தாத்தா... அந்தக் கொலைகாரக் கும்பலை விட்டு வைக்கக் கூடாது தாத்தா... எங்கே அவன்? வந்தானா இந்தப் பக்கம்?''

கிழவர் இளைஞர்களின் ஆத்திரத்தைத் தணிக்க விரும்பினார். எனவே, ''தம்பிகளா? ஆத்திரப்படாதீங்க... ஆத்திரம் அறிவை அழிக்கும்பாங்க... விவரம் என்ன? சொல்லுங்க முதல்ல...''

''என்ன தாத்தா நீங்க? இந்த நாட்டுல தான் இருக்கிறீங்களா? உலகமே அப்படியே பதறிக் கிடக்குது...''

கிழவருக்கு ஓரளவு விவரம் புரியத்தொடங்கியது. இருப்பினும், டில்லியில் இந்திராஜி சுடப்பட்டதற்கும், ஆயிரக்கணக்கான மைல் தூரத்தில் இங்கு இவர்கள் யாரையோ தேடி வந்துள்ளதற்கும் என்ன தொடர்பு என்று புரியவில்லை.

''கேட்கவே மனசு துடிக்குதுப்பா... ம்... அது சரி... தென்னை மரத்துல தேள் கொட்டினு, பனை மரத்துல நெறி கட்டிச்சும் பாங்க... அதுமாதிரி, அவர் அங்க சுடப்பட்டதற்கும், நீங்க கொலை வெறியோட ஒரு ஆளைத் தேடி அலையறதுக்கும் என்னப்பா சம்பந்தம்...?'' கிழவரிடம் குழப்பம்.

''சம்பந்தம் இருக்குதே... கொலையாளிங்க வேற யாரு? சீக்கியனுச்சுதே... அந்த இனத்தானுங்களைச் சும்மா விடலாமா?''

கிழவரின் குழப்பம் மேலும் அதிகமாயிற்று. அத்துடன் அதிர்ச்சி வேறு.

''அது மட்டும் இல்லை தாத்தா... ரேடியோவுல இந்தப் பயங்கரச் செய்தியைக் கேட்ட உடனே, நாங்கள்லாம் பதறிப் போய் நிற்கிறோம். இவன் என்னடான்னு, கொஞ்ச நேரம் முந்தி, நிதானமா வந்து... கடையில சாக்லெட் வாங்கித் தின்கிறான்!''

கிழவர் பேச நா எழாமல், 'அடப்பாவி!' என்றார்.

ஒருவன் சொன்னான்: ''உடனே நான் என்ன செய்தேன் தெரியுமில்ல... ஒரே அடி! பிடரியைக் காட்டிக் கொடுத்தேன். கீழே குப்புற விழப் போனவன், சமாளிச்சுக்கிட்டு எழுந்து, இருட்டுல எங்கேயோ ஓடித் தப்பிச்சுட்டான்... துரத்திக்கிட்டு வர்றோம்...''

''தப்பிச்சுட்டா... விட்டுடுவமா? பழிக்குப் பழி... கொலைக்குக் கொலை... அகப்படாம எங்க போவான்... கண்டுட்டோம்... தீர்த்துட மாட்டோம்...'' இளைஞர்கள் சூளுரைத்தனர்.

''ராத்திரி இந்தப் பக்கம் வந்தான்னு மடக்கிப் போடுங்க... நாங்க ரா முழுக்க, அங்க இங்க தேடிட்டு, காலையில வர்றோம்...'' என்றவாறு இளைஞர்கள் விடைபெற்றனர்.

அப்போது இரவு மணி பத்து இருக்கும்.

* * * * *

கிழவர் மெல்ல எழுந்து உள்ளே போனார். கதவை உள்புறம் தாழிட்டுக் கொண்டார்.

''தம்பி...! எங்கே இருக்குறே? இங்கே வா...'' என்றவாறே ஹாலுக்குள் நுழைந்தார். ஒரு மூலையில் ஒரு பெரிய மர பீரோ. அதன் மறைவிலிருந்து ஒரு நடுத்தர வயதினர் வெளிப்பட்டார்.

வேறு யாருமல்ல... அந்த நான்கு இளை ஞர்கள் தேடிக் கொண்டு வந்த சிக்கியனே தான்.

இரவு எட்டு மணி சுமாருக்கு அந்தப் பக்கம் மறைந்து மறைந்து ஓடி வந்தான். கிழவரின் வீடு பிரதான நெடுஞ்சாலையை ஒட்டி இருந்தது. சுற்றுவட்டாரத்தில் வேறு வீடுகள் இல்லை.

கிழவர் திண்ணையில் உட்கார்ந்திருந்தார். வயதானவர் ஆதலால், தன்னைக் காட்டிக் கொடுக்கமாட்டார்என்றநம்பிக்கை.அடைக் கலமாகி விட்டான்.

அப்போது வானம் பலமாகத் தூறிக் கொண்டிருந்தது. எனவே அவனது உடை தெப்பமாக நனைந்திருந்தது. கிழவர் அவனை உள்ளே அழைத்துப் போனார்.

கிழவர் வீட்டில் வேறு எவரும் இல்லை. ஒண்டிக்கட்டை மனைவி இறந்து வெகு கால மாகி விட்டது. ஒரே மகன். அவனைத் தனது வாரிசாக ராணுவத்தில் சேர்த்திருந்தார். கடந்த வாரம் தான் விடுப்பில் வந்துவிட்டுப் போனான்.



அதே ஊரில் இருந்த உறவுக்காரப் பெண் மணி ஒருத்தி. தினசரி காலையில் வந்து சோறு பொங்கி வைத்துவிட்டுப் போவாள்.

கிழவர் முதலில் அவனது நனைந்த உடைகளைக் களையச் சொன்னார். அவன் உடல் குளிராலும் பயத்தாலும் நடுங்கியது. ஒரு துண்டை எடுத்துக் கொடுத்தார். தலையைத் துவட்டிக் கொண்டான்.

பெட்டியில், அவரது மகன் மறந்து போய் வைத்து விட்டுச் சென்றிருந்த உடைகள் இருந்தன. ராணுவச் சீருடை. எடுத்துக் கொடுத்தார். உடுத்திக் கொண்டான்.

பானையில் சோறு இருந்தது. ஒரு தட்டில் பிழிந்து போட்டார். கொஞ்சம் மோர் ஊற்றினார். உப்பை எடுத்துத் தூவினார். வேறொரு கிண்ணத்தில் கொஞ்சம் குழம்பை ஊற்றினார்.

அதற்குள் அவன் உடைகளை அணிந்து கொண்டு விட்டான். தட்டையும் கிண்ணத்தையும் கொண்டு வந்து வைத்தார். சாப்பிடச் சொன்னார்.

அவன் எதற்காகத் தன்னிடம் அடைக்கலம் அடைந்துள்ளான் என்பதை அறியக் கிழவரிடம் ஆவல்.

அவன் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். 'சாப்பிட்ட பிறகு, அவனுகச் சொல்லட்டும்; சொல்லாவிட்டால் பிறகு கேட்கலாம்' என்று ஆவலை அடக்கிக் கொண்டார்.

எனவே, அதுவரையில், வழக்கம் போல், வாசல் திண்ணையில் வந்து அமர்ந்திருந்தார்.

அப்போது தான் அந்த இளைஞர்கள் சீக்கியனைத் தேடி வந்தது.

தன் வீட்டில் இருப்பது அந்த சீக்கியன் தான் என்பதை அறிய, அவருக்கு வெகுநேரம் ஆகவில்லை. எனவே பக்குவமாகப் பேசி, அவர்களை அனுப்பிவிட்டு உள்ளே போனார்.

* * * * *



ஓட்டலில் ஒருவர்: என்ன சார் இட்லி மீது நெருப்புக் குச்சியை உரைச்சுத் தீ வச்சுப் பார்க்கறீங்க?

மற்றவர்: இட்லி பஞ்சர்ட்டம் இருக்கு முன்னு சர்வர் சொன்னார், தீப்பிடிக்கு மான்னு பார்க்கிறேன்...

—மலர்விழி சரண்யா.

என்ன தம்பி! அந்த இளைஞர்கள் திண்ணையில் என்கிட்ட பேசிகிட்டு இருந்ததை எல்லாம் கேட்டியில்ல...?''

''சீக்கியனிடம் பதில் இல்லை.

''அவங்க உன்னைக் கொலை பண்ற நோக்கத்தோட தேடிகிட்டு இருக்கிறது நியாயம்னு, இப்ப தோணுது எனக்கு.... நீ என்னப்பா சொல்றே?''

அதற்கும் பதில் இல்லை. தலையைக் குனிந்தவாறு நின்று கொண்டிருந்தான்.

''இப்பவே அந்த இளைஞர்களைக் கூப்பிட முடியும் என்னலை.... அப்படிச் செய்ய என் மனச்சாட்சி இடம் தரல்ல.... ஏன்னு, நீ என் கிட்ட அடைக்கலமா வந்துட்டே..... ஒரு பறவைக்காகத் தன் சதையை அறுத்துக் கொடுத்து, அந்த அடைக்கலப் பொருளைக் காப்பாற்றிய சிபிச் சக்கரவர்த்தி வாழ்ந்த நாட்டுல பிறந்தவன் நான்... நான் மட்டுமல்ல... நீயும்தான் அதனுல என் மனசு இடம் தரல்ல....''

அவன் தலை நிமிர்ந்து அவரைப் பார்த்து விட்டுமீண்டும்குனிந்துகொண்டான். அவன் முகத்தில் கொஞ்சம் நன்றியுணர்வு.

கிழவர் தொடர்ந்தார். ''தவிரவும் நம்ம தலைவர்கள் காந்திஜி, நேருஜி..... ஏன்.... இந்திராஜிகூட, நமக்குத்தவறுன பாதையைக் காட்டல்ல.... புத்தன் வாழ்ந்த பூமியில் நாம இருக்கிறோம்....! அகிம்சைக்கு அர்த்தம் சொன்ன நாடு நம்ம நாடு.... அத்தகைய நாட்டுல, பட்டப் பகல்ல, படுகொலை.... அதுலயும் ஒரு பெண்மணி; நினைக்கவே நெஞ்சு பதறுதுப்பா.....'' கிழவர் உணர்ச்சி வசப்பட்டுப் போனார்.

''அதுதான் போகட்டும். அவங்க டில்லியில படுகொலைக்கு உள்ளாயிட்டாங்கன்னு கேள்விப்பட்ட உடனே, சந்தோஷமா 'சாக்லெட்' வாங்கித்தின்னியாமே....எப்படிப்பா உனக்கு மனசு வந்துச்சு.... அந்தத் தாய் உனக்கு என்ன கெடுதல்ப்பா செய்தாங்க?''

அதற்கும்கூடச்சீக்கியனிடம்பதில்இல்லை.

ஏற்கனவே உணர்ச்சி வசப்பட்டிருந்த கிழவரால், அவனது மௌனத்தைப் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. அவர் ஆவேசம் கொண்டவரானார்.

''ஏய்! என்னடா நான் கேட்கிறேன். நீ அழுத்தமா நின்னுகிட்டு இருக்குறே....? உன்னையெல்லாம்.....'' என்றவாறு, ''எங்கேடா அது?'', என்று அருகில் எதையோ தேடினார்.

பக்கத்தில் மேஜை டிராயரைத் திறந்தார். பளபளப்பான கத்தி..... அதை எடுத்தார்.

சீக்கியன் முகத்தில் பீதி படர்ந்தது. சற்று முன்பு சிபிச் சக்கரவர்த்தி பற்றிப் பேசியவரா இப்படி ஆவேசப்படுகிறார் என்ற உணர்வு. எனினும் அவன் ஆடவில்லை.. அசையவில்லை.

கிழவர் சீக்கியனிடம் ஓடினார். அவனது சிகையை ஒரு கையால் பிடித்து அவன் தலையை நிமிர்த்தினார். கிழவரை நேருக்கு நேர் பார்வையைச் சந்திக்க அவனிடம் ஒரு கூச்சம்.




வி.ஐ.பி. ஸூட்கேஸ் பரிசுத் திட்டம்

**போட்டி : 26**

உங்கள் சொந்த வாழ்க்கையில் அல்லது பொது வாழ்க்கையில் ஒரு சம்பவம் நடந்தே ஆக வேண்டும் என்று நீங்கள் ஆவலோடு எதிர்பார்த்திருந்து, பிறகு அது நடக்காமல் போனபின், 'நல்லவேளை, அது நடக்காமல் போனதே நல்லதாப் போச்சு!' என்று சந்தோஷப்பட்ட அனுபவம் சில முறையாவது உங்களுக்கு ஏற்பட்டிருக்குமே! அவற்றில் சுவாரஸ்யமான ஏதேனும் ஒன்று பற்றிக் கீழேயுள்ள வெற்றிடத்தில் எழுதி, இந்த அரைப்பக்கத்தை மட்டும் முழுமையாகக் கத்தரித்து எங்களுக்கு அனுப்புங்கள். பிரசுரமானால் பரிசு. தவிர, ஒருவருக்குக் குலுக்கல் முறையில் விலையுயர்ந்த வி. ஐ. பி. ஸூட்கேஸ். உறையின் மேல் 'நடக்காமல் போனதே நல்லதாப் போச்சு!' என்று மறக்காமல் குறிப்பிடுங்கள்.

**முடிவு தேதி: 11.11.85**

**இன்னும் 27 வி. ஐ. பி. ஸூட்கேஸ்கள் உங்களுக்காகவே காத்திருக்கின்றன. வாரம் தவறாமல் போட்டிகளில் பங்கு பெற்று அவற்றுள் ஒன்றைத் தட்டிச் செல்லுங்கள்.**

என் பெயர்: ..........................

விலாசம்: ..........................

..........................

கிழவர் மற்றொரு கையிலிருந்த கத்தியால், அவனுடைய சிகையை வெட்டி எறிந்தார். அப்போதும் அவன் நிலையில் மாற்றம் இல்லை. எனவே கிழவரின் ஆத்திரம் மேலும் அதிகமாயிற்று.

அவர் அவனது தாடியைக் கொத்துக் கொத்தாகப் பற்றி நறுக்கி எறிந்தார். அவன் முகத்தோற்றத்தை அலங்கோலப்படுத்தினார். அப்போதும் அவன் வாய் திறக்கவில்லை.

அவனது இந்த மௌனம், கிழவரைக் கூச வைத்திருக்க வேண்டும். தான் இத்தனை ஆவேசமாக, அவனது தாடியை வெட்டி எறிந்தும்கூட, அவன் அமைதி குலையாமல் நிற்பது கண்டு, மெல்ல மெல்லத் தம் ஆத்திரத்தை அடக்கிக் கொண்டார்.

அந்தச் சீக்கியன் உடல் வலு உள்ளவன் தான். அவன் நினைத்திருந்தால், ஒரே அடியில் கிழவரை அடித்து வீழ்த்தியிருக்க முடியும். ஆனால், அதற்கு அவன் முயலவில்லை. அதற்குக் காரணம் இருந்தது.

சற்று முன்பு, கிழவர் அன்புடன் இட்ட அந்தச் சோறு, இன்னும் அவன் வயிற்றில் அப்படியே இருந்தது. தவிரவும், ஏதோ ஒரு இனம் புரியாத குருட்டுத்தனமான மகிழ்ச்சியால் உந்தப்பட்டு 'சாக்லெட்' வாங்கித் தின்றானே தவிர, பிற்பாடு, தான் அவ்வாறு செய்தது தவறு என்பதை உணர்ந்துவிட்டான்.

அதற்குப் பிராயச்சித்தமாக அந்த இளைஞர்களிடம் சிக்கி அடி உதை வாங்கிச் சாவதை விட, கிழவர் கையால் தனக்குக் கிடைக்கும் தண்டனை நியாயமானதே என்று நினைத்திருக்க வேண்டும். எனவேதான், அவன் மௌனம் சாதித்து, அடங்கிக் கிடந்தான்.

''ஐயா! நான் செஞ்சது தப்புத்தான். உணர்ந்துட்டேன்.... அதுக்கு நீங்க என்ன தண்டனை கொடுத்தாலும் ஏத்துக்கறேன்... ஆனா, என்னை அந்த இளைஞர்கள்கிட்ட மட்டும் காட்டிக் கொடுத்துடாதீங்க ஐயா!'' என்று கெஞ்சினான், அந்தச் சீக்கியன்.

கிழவரிடம் பதில் இல்லை. அவன் தொடர்ந்தான். ''வழி தவறிப் போன சில பேருடைய சொல்லைக் கேட்டு, யாரோ ஒருத்தர் ரெண்டு பேரு செய்த தப்புக்காக, ஒரு பாவமும் அறியாத அப்பாவிகளான சீக்கிய இனம் முழுவதையுமே எதிரியா பாவிச்சு, அடிச்சுக் கொல்றதுன்னா, அது தப்பு இல்லியா, ஐயா?''

''தம்பி! நடந்து போனதை ரெண்டு பேருமே மறந்துடுவோம்..... இப்ப நீ என்ன பண்றே....''

''சொல்லுங்கய்யா....''

''இதோ பிளேடு இருக்குது. ரேஸர் இருக்குது.... நீ இப்பவே உன் தாடி மீசையை மழிச்சுடு.... வேணும்னா, நான் உன் தலை முடியைக் கொஞ்சம் திருத்திவிடறேன். பார்க்கிறதுக்கு நல்லா இருப்பே.... அதோட 'சீக்கியன்' மாதிரியும் தெரியாது.....''

அவன் கிழவர் சொன்னது போலவே செய்தான். இப்போது தோற்றத்தில் ஒரு 'ஹிந்து'. அது மட்டுமல்ல, ஒரு ராணுவ வீரனும்கூட. ஏனெனில், அவன் உடுத்தியிருந்தது, ராணுவத்தில் உள்ள கிழவரின் மகன்

லக்கேஜ் பெட்டித் தயாரிப்புத் தலைவர்களின் படைப்பு—

# வி.ஐ.பி. கன்கார்டு

வந்திறங்குது இப்போது—

இதோ, ஜெட் யுகக் கட்டழகுள்ள புதிய விஐபி கன்கார்டு! நாகரீக நரம்போடிய அலாதி ஸ்டைலிங். கண்டறியாத வர்ண வகைகள்: பீச் க்ரீம் (செவ்விள மஞ்சள்), டெஸர்ட் பிரவுன் (மணற் கபில நிறம்), மிஸ்ட் க்ரே (பனிச் சாம்பல்), க்ரீம் சாக்கலேட், மேலும் பலப் பல. உட்புறமோ இடவசதி மிகுதி.

ஓடோடிப் பார்வையிடுவீர்: அருகிலுள்ள வியாபாரியிடம்... சொகுசு லக்கேஜ் புதுவரவுகள்.

## ஆகாயமெட்டும் எங்கள் அதிநவீனக் கற்பனை.




**தேர்ந்தெடுக்க மிகப் பல வகைகள்,**
**வருங்கால யோக வரவுகளோ மேலும் பலப்பல.**

LINTAS VIP M 10 2013 TM



"பையனுக்குவரதட்சிணை,சீர்செனத்தின்னு ஒண்ணும் வேண்டாம். ஒரு அட்மிஷன் மட்டும் வாங்கிக் கொடுத்துட்டா உங்க பெண்ணைத் திருமணம் செஞ்சுக் கறதாச் சொல்றான்!"

"எங்கே அட்மிஷன் செய்யணுமாம்?"

"அண்ணாமலை யுனிவர்ஸிடி மெடிகல் காலேஜிலே இரண்டரை லக்ஷம் கொடுத்து!"

—சீர்காழி சாமு.

---

மறந்து போய்விட்டுச் சென்றிருந்த ராணுவச் சீருடையாயிற்றே!

கிழவரின் வீட்டை ஒட்டித்தான் தேசிய நெடுஞ்சாலை. அதில், சதா, குறிப்பாக இரவு நேரங்களில், வாகனங்களின் போக்குவரத்து அதிகம். அவற்றில் ஏதாவது ஒன்றை நிறுத்தி, அந்தச் சீக்கியனை ஏற்றி அனுப்பி விடத் திட்டம் போட்டார் கிழவர். அடைக்கலப் பொருளைப் பத்திரமாகக் காப்பாற்றியாக வேண்டுமே! பக்கத்து நகரத்துக்குப் போனால், நிச்சயம் போலீஸ் பாதுகாப்பு கிடைக்கும்.

* * * * *

விடியற்காலை மூன்று மணி. கிழவர் சீக்கியனை அழைத்துக் கொண்டு, சாலைக்கு வந்தார். பக்கத்து நகரத்துக்குப் போகும் தனியார் கார் ஒன்று வந்தது. கையைக் காட்டி நிறுத்தினார்.

"என்ன பெரியவரே! என்ன வேணும்?" வினவியது கார் டிரைவர்.

"ஒண்ணுமில்லே.... இவன் என் மகன். பட்டாளத்துல இருக்கிறான்...." என்று ஆரம்பித்தார் கிழவர்.

"ஆமாம் சார்.... பொழுது விடிஞ்சா, நாளைக்கு நான் வடக்கே போகிற ரயில்ல ஏறியாகணும் சார்...." சீக்கியன் தொடர்ந்தான்.

"ராத்திரி பஸ்கல இடம் கிடைக்கல்ல... கொஞ்சம் ஏத்திகிட்டுப் போயி, பக்கத்து டவுன்ல விட்டுட்டீங்கன்னா...."

"ஆமாம் சார்.... ரொம்ப உதவியா இருக்கும்."

இருவரும் மாறி மாறிக் கெஞ்சினர்.

"சரி..... சரி.... ஏறிக் குந்திக்குங்க. இப்படி முந்தி வாங்க....." என்றார் டிரைவர்.

"அப்ப நான் போயிட்டு வர்றேன் அப்பா. உடம்பை ஜாக்கிரதையா பார்த்துக்குங்க" சீக்கியன் நன்றாக நடித்தான்.

"சரிப்பா.... போயி கடுதாசு போடு..."

கார் நகர்ந்தது.

கிழவர் நீண்ட பெருமூச்சுவிட்டார். பெரும் பாரம் ஒன்றை இறக்கி வைத்துவிட்டது போன்ற சுகம்! கார் சென்ற திக்கையே சற்று நேரம் பார்த்துக் கொண்டிருந்தார்.

அப்போது பின்புறம் ஏதோ ஆளரவம் கேட்டது. கிழவர் திரும்ப எத்தனித்தார். அதற்குள் யாரோ அவருடைய பின்புறம் காலால் ஓங்கி உதைக்கவே, நிலை தடுமாறி, சற்று தூரம் போய், தலைகுப்புற விழுந்தார்.

தன்னை உதைத்துத் தள்ளியது யாராக இருக்கும் என்பது, கிழவருக்குப் பொறி தட்டியதுபோல் பளிச்சிட்டது.

அந்த இளைஞர்கள் பிற்பாடு இப்படிச் செய்வார்கள் என்பதை அவர் எதிர்பார்த்திருந்தார். ஆனால், இத்தனை விரைவில் இப்படிக் கையும் களவுமாகப் பிடிபடுவோம் என்று நினைக்கவில்லை.

நடந்தது இதுதான்.

அந்த இளைஞர்கள், கிழவரின் வீட்டை நோக்கி வந்து கொண்டிருக்கும்போது, யாரோ ஒருவர் ராணுவ உடையில் உள்ள ஒரு நபரைக் காரில் ஏற்றி விடுவதைப் பார்த்திருக்கிறார்கள்.

அதற்குள் அவர்களில் ஒருவன், கிழவரின் வீட்டுக்குள் புகுந்திருக்கிறான். அங்கு அந்தச் சீக்கியனின் மழிக்கப்பட்ட உரோமங்கள் கொத்துக் கொத்தாகக் கிடந்திருக்கின்றன.

அவர்களுக்கு விவரம் புரிந்துவிட்டது. உடனே ஓடி வந்து கிழவரைத் தாக்கத் தொடங்கிவிட்டனர்.

குப்புற விழுந்த கிழவரை எழவிடாமல், இளைஞர்கள் சூழ்ந்து கொண்டனர். காலாலும் கையாலும் புரட்டி எடுத்தனர்.

ஆனால் அவர்கள் அடித்தது செத்த பாம்பைத்தான். இந்த உண்மை அவர்களுக்குப் புரியவில்லை.

முதன்முதலாகக் குப்புற விழுந்த உடனேயே, நெஞ்சில் பலமான அடி. கிழவரின் உயிர்ப் பறவை பறந்துவிட்டது.

இந்திராஜி தன்னிடம் இந்திய மக்கள் அடைக்கலமாக வழங்கிய சீக்கியர் வாழும் இந்திய நாட்டைச் சிதறாமல் காக்கும் முயற்சியில் ஈடுபட்டார். இங்கு இந்தக் கிழவர், தன்னிடம் அடைக்கலமாகப் புகுந்த ஒரு சீக்கியப் பிரஜையைக் காக்கும் முயற்சியில் ஈடுபட்டார். இருவரும் கொலையுண்டனர்.

இரண்டு கொலையிலும் என்ன வேறுபாடு இருந்துவிட முடியும்?




அதனால்தான் ரஜனி கோத்ரெஜ் வாஷிங் தயாரிப்புகளையே உபயோகிக்கிறார்.




"இக்காலத்திலே வாஷிங் பொருள்களின் விலை எக்கச்சக்கமாக ஏறிக் கிடக்கின்றன. என்னைப் போன்ற நடுத்தர குடும்பத்து தாய்மார்களுக்கு மிகவும் சிரமம்தான்.

இருந்தாலும், எங்களுடைய குடும்பத்திற்கு எதுவாயினும் மிகச்சிறந்த பொருள்தான் வாங்க வேண்டும் என்பது என் எண்ணம். நான் பார்த்து பார்த்து வாங்குகிறேன். ஆகவே, நான் செலவு பண்ணும் ஒவ்வொரு பைசாவும் நல்ல வசூல் செய்து விடுகிறேன்.

வாஷிங் பொருள்கள் வாங்கும்போது, நான் கோத்ரெஜ் தயாரிப்புகளாகிய கீ டிடெர்ஜண்ட் பார், ட்ரைலோ டிடெர்ஜண்ட் கட்டி, பிஸ் துலக்கும் பவுடர் போன்றவைகளைத்தான் வாங்குவேன். ஈஸி லிக்யுட் டிடெர்ஜண்ட் மூலம் டிளாக்சினிங் செலவு மிகவும் மிச்சமாகிறது. அவற்றின் விலை நியாயமாகவும், உயர்ந்த தரம் வாய்ந்ததாகவும் இருக்கின்றன.

எனக்குப் பணத்தை விரையமாக்கப் பிடிப்பதில்லை. யார்தான் அப்படி செய்வார்கள்!"

உண்மையான மதிப்பைத் தரும் தயாரிப்புகளை **கோத்ரெஜ்** - வழங்குகிறது ரஜனியே ஒத்துக்கொள்கிறார்.

Mudra:B:G: 2631



**பலன் கொடுத்த கோபம்!**

எங்களூரில் குதிரை வண்டிகள் அதிகம். ஒரு முறை நான் நண்பர்களோடு சென்று கொண்டிருந்த போது, ஒரு குதிரை வண்டியில் நானைந்து பேர் பயணம் செய்வதைப் பார்த்தேன். பாவம், அது இழுக் குதிரையாத லால் வண்டியை இழுக்கமுடியாமல் திணறிக் கொண்டிருக்க, வண்டிக்காரனோ அதைச் சாட்டையால் அடி அடி என அடித்துக் கொண்டிருந்தான். எனக்கு வந்ததே கோபம். "நீயெல்லாம் மனுஷனய்யா? பாவம், அது வாயில்லா ஜீவன்தானே!" என்று நான் கத்தியதும் என் நண்பர்களும் என்னோடு சேர்ந்து கத்த... பிறகென்ன? என் கோபத்திற்குப் பலன் கிடைத்துவிட்டது!

எம். ஏ. காதர், விருத்தாசலம்—1.

**அட, சாக்கடையே!**

கமல்—ஸாரிகா விவகாரம் தனிப்பட்ட விஷயம். இதற்குக் கமலின் தத்துவ முலாம்! புராண, இதிகாசங்களிலிருந்து தந்தையாரின் உதாரணம்வேறு! 'உயர்ந்த உள்ளம்கொண்ட ஆண் சிங்கம் கமல் & ஸாரிகா நீடூழி வாழ்க!' என்று போஸ்டர் அடித்து ஒட்டும் ரசிகர்கள் ஒரு பக்கம். இதெல்லாம் எதற்காக? யாருக்காக? அட சாக்கடைச் சமுதாயமே!

இரா. செல்வசுப்பிரமணியன், நாகர் கோவில்—2.

**போலிஸ் கேட்ட லஞ்சம்!**

பாஸ்போர்ட்டுக்காக என்னை விசாரிக்க ஒரு போலீஸ்காரர் வந்திருந்தார். நான் அரசு ஊழியர் என்று தெரிந்ததும் என்னிடம் லஞ்சம் கேட்டார். என்னிடமே லஞ்சம் என்றால் பொது மக்களிடம் அவர் எப்படி நடந்து கொள்வார்? சரியான கோபம் எனக்கு. "பாஸ்போர்ட் பாரத்தைக் கிழித்துப் போடுங்கள். லஞ்சம் தர மாட்டேன்; அதற்கு என்னிடம் பணமும் இல்லை!" என்று கோபமாகக் கூறி விட்டேன். மற்றவர்களைவிட எனக்குத்தான் சீக்கிரமாகப் பாஸ்போர்ட் வந்தது!

கே. பி. சுந்தரேசன், இருமேனி (இராம நாதபுரம்).

**போஸ்டர்களின் மேல் கோபம்!**

டவுன் பஸ்நிற்கும் இடங்களிலுள்ள ஷெல்டர்களில் டவுன் பஸ்களின் தட எண்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. அவற்றின்மேல் கல்லூரி மாணவர்களின் தேர்தல் பிரசாரப் போஸ்டர்களும், கிறிஸ்துவ மதப் பிரசாரப் போஸ்டர்களும் ஒட்டப்பட்டு அந்தத் தட எண்களே தெரியாதபடி மறைந்து போகின்றன. இதனால் எந்த பஸ் அங்கு வரும் போகும் என்று புரியாமல் பொது மக்கள் திண்டாடித் தவிக்கும்போது, எனக்கு வருமே அப்படியொரு கோபம்!

நா. இராஜேஸ்வரி, சென்னை—34.



**கோபம் மட்டும் போதாது!**

சமீபத்தில் ஒரு மருத்துவமனையில், ஒரு வயதுக் குழந்தை ஒன்றிற்குச் சரியான முறையில் ஊசி போடப்படாததால் கால்கள் அழுகி நீக்கப்பட்டு விட்டன. பிறகுதான் தெரிந்ததாம் அந்தக் குழந்தைக்குச் சிகிச்சையளித்த இரண்டு இளம் மருத்துவர்கள் போலிப் பட்டங்கள் வாங்கியவர்கள் என்று! என்ன செய்ய முடியும்? இதுபோல் பல இடங்களிலும் நடக்கிறது. நாம் அனைவரும் இதற்கு கோபப்படுவதோடு நிறுத்திக் கொள்ளாமல் முயற்சி எடுத்துப் போலி மருத்துவர்களை ஒழிக்க வேண்டும்.

ஆனந்தி பாலகிருஷ்ணன், பெங்களூர்

**ரேஷன் கடையில் வரும் கோப[ம்]**

ரேஷன் கியூவில் கால் கடுக்கப் பொ... யாக நின்று கொண்டிருந்து சென்று... லோடு நாம் கார்டை நீட்டும் போது... 'நேரம் பார்த்து, பில் போடுபவர் ம... எழுந்து செல்வதைக் கண்டு வரும்... இருக்கிறதே... அப்பப்பா!

எஸ். விஜயா சீனிவாசன், தி...

**ஓசி கிராக்கிகள்**

காலையில் நம் வீட்டில் பேப்ப... பர் போட்டஉடனேயே பக்கத்து... வந்து ரொம்பவும் அந்நியோன்... பரை எடுத்துச் சென்று ப... விட்டுத் தம் வீட்டுச் சிறுவ... வீட்டுக்குக் 'கொடாசி' விடும்... ஒரு கோபம்! அந்தப் பேப்ப... போதே நேற்றையது போல்... கும்போது செய்திகளும் ப... தொரு உணர்வுதான் ... வராதா கோபம்!

எஸ். கிருஷ்ணமூ...

...றவிகளோ!

இண்டுக்கல் நகரின் குடி ...டறிந்தபிரச்னை. நாங்களெல் ...க்காகக் குடத்தைத் தூக்கிக் ...ருத்தெருவாக அலையும்போது, ...ம் எல். ஏ. மாஸ்கோ சென்று ...ாங்களுடைய குடிநீர்ப் பிரச்னை ...ாமல் இப்படிச் சென்றுவிட்டாரே ...ங்கள் ஆதங்கப்பட்ட போது, அவ ...ஆதரவாளர்கள் சிலர், 'என்னய்யா ...குடிநீர்ப் பிரச்னை? இது இப்படித்தான் ...ம் மாஸ்கோ செல்வதற்கு இதைவிட ...ு (ஓசி) சந்தர்ப்பம் கிடைக்குமா? ...விட்டுவிட்டு இங்கேயே கிடந்து

யில்!' என்று கோபமாகக் கூறிவிட்டு வந்து விட்டேன்.

ஏ. வெங்கடாசலம், சேலம்—5.

## ...ர்த்தமுள்ள ...கோபம்!

...மலைப் படச் சொல்கிறீர்களா?'' என்றார் ...ா. அப்போது எங்களுக்கு ஏற்பட்ட ...கோபத்தை என்னவென்று சொல்வது? என்ன ...ான் பிறவிகளோ அவர்கள்?

வி. தங்கதுரை, திண்டுக்கல்—1.

**அலட்டல் பத்திரிகைகள்**

இன்றுநாறு பத்திரிகைகள் தமிழ்நாட்டில்; அத்தனையும் மக்களைக் கரையேற்ற அவதாரம் எடுத்திருப்பது போல்தான் அலட்டல்! சினிமா கிசுகிசுக்கள்; கிறுக்குத்தனமான புதிர்கள்; அறுவை ஜோக்குகள்; அத்தை பாட்டி அல்லது ஆபாசக் கதைகள், யாரோ சொந்த லாபத்திற்காக எடுக்கும் சினிமாக் களுக்குப் பெரிய நக்கீரன் மாதிரி விமர்சனம்! அரசியல்வாதிகளைத் தலைக்குமேல்தாங்குவது அல்லது தாக்குவது; இல்லையானால் உலக மகா ஞானிபோல் குறை சொல்லிக் கொண்டே இருப்பது இலவச இணைப்புப் போட்டால் கூட இதே கண்றாவிகள்தான்! கையில் பேனவும் பொழுது போக்கத் தெரி...







**நிலைமை புரியாத கணவர்!**

நன்றாகப் பார்த்துப் பார்த்துச் சமைத்து வைத்துக் கொண்டு காத்திருக்கும் போது வீட்டுக்கு வரும் கணவர், 'ஸாரி! எனக்குப் பசியே இல்லை; ஹோட்டலில் சாப்பிட்டு விட்டேன்!' என்று சொல்லுவார். ஆனால் தலைவலி, வயிற்று வலி என்று நமக்கு வந்து வெறும் ரசம் மட்டும் சமைத்து வைக்கும் போது, 'இன்று எனக்கு நல்ல பசி. நீ வெறும் ரசம் மட்டும் வைத்திருக்கிறாயே...' என்று கணவர் கோபிக்கும் போது நமக்கு வரும் கோபம்தான் அர்த்தமுள்ள கோபம்!

தனிஸி ராமநாதன், ஈரோடு—3

...1 ...த ...க ...பம்

...-14.

...ர் பேப் ...க்காரர் ...ய். பேப் ...முடித்து ...மலம் நம் ...து வருமே ...ப் பார்க்கும் ...ன்றும்; படிக் ...வை போன்ற ...ும். பின்னே

...ு. காஞ்சிபுரம்.

**அமைச்சர் மீது கோபம்!**

ஐந்து ஆண்டுகளுக்குமுன்பு சேலம்மாவட் டத்திலேயே அதிக மதிப்பெண்கள் பெற்றி ருந்தும் என் மகனுக்கு மருத்துவக் கல்லூரி யில் இடம்கிடைக்கவில்லை. அமைச்சர் ஒருவ ரிடமைப் பார்த்து விவரம் சொன்னேன். அவர், 'இவ்வளவு மதிப்பெண்கள் வாங்கி யிருக்கிறானே! என்னை என் முன்கூட்டியே வந்து பார்க்கவில்லை?' என்று கேட்டார். 'நீங்களெல்லாம் நேர்மையானவர்கள் என்று நினைத்ததால்தான் நான் முன்கூட்டியே உங் களைப் பார்க்க வரவில்லை!' என்றேன். உடனே அவர், 'நீங்கள் எந்தத் துறையில் வேலை செய்கிறீர்கள்?' என்று கேட்டார் நான், 'நீங்கள் கைவைக்க முடியாத் துறை



அப்பா: என்ன, பசங்க ரூமிலிருந்து கோயில்கோயில்னு சத்தம் கேக்குது! பரவாயில்லையே! எந்தக்கோயிலுக்குப்போறாங்களாம்?

அம்மா: இதயக் கோயில் மாட்டினி ஷோவுக்கு!

— மலர்விழி.

யாத வாசகனும் கிடைத்துவிட்டால், விவஸ்தையே இல்லாமல் அவன் மூளையை மழுங்கடிக்கச் செய்யும் பத்திரிகைகளை என்ன செய்தாலும் தகும்.

எம். சாருபாலா, உதகை—1.

## ஓர் அக்னிக் கோபம்!

பொதுக் கழிவறை நாற்றத்தில் மணிக்கணக்கில் காத்திருந்து காலைக் கடன் கழித்த அனுபவம் எந்த ஜனாதிபதிக்காவது நேர்ந்ததுண்டா? எந்தப் பிரதமருக்காவது சைக்கிளில் குடிநீரைச் சுமந்து கொண்டு வந்த அனுபவம் உண்டா? எந்த முதலமைச்சரின் மனைவி ரேஷன் கியூவில் நின்று அலுப்புத் தட்டித் திரும்பியிருக்கிறார்? எந்த அமைச்சர் வீட்டில் வேலையின்றித் திரியும் பிள்ளைகள் இருக்கின்றனர்? இவையெல்லாம் எனக்கும் உங்களுக்கும் மட்டுமே சொந்தமானவை என்பதே என் அக்னிக் கோபம்!

து. ரவி, திருப்புத்தூர்.

## சட்டசபையின் தரம் உயர...

சட்டசபையில் நாம் நோட்டீஸ் வீசினால் நமக்கு ஜெயில் தண்டனை. ஆனால், செருப்பு, பேப்பர் வெயிட் ஆகியவற்றை வீசும் எம். எல். ஏக்களுக்குத் தண்டனை ஏதும் இல்லை. ஏன் இந்த முரண்பாடு? அவர்களுக்கும் தண்டனை தர வேண்டும். அப்போதுதான் சட்டசபையின் தரம் உயரும்.

எம். இராதாகிருஷ்ணன், வாணியம்பாடி.

## கழுத்தறுக்கும் ஆசாமிகள்!

சீனியாரிட்டி என்னய்யா பெரிய சீனியாரிட்டி? அறிவிலோ, ஆற்றலிலோ, பண்பிலோ, பழகுவதிலோ... எதையெடுத்தாலும் சூன்யம். இருபது, இருபத்தைந்து வருடம் சர்வீஸ் போட்டவன் என்ற ஒரே காரணத்தினால் நமக்கு மேல் உட்கார்ந்து கொண்டு கழுத்தறுக்கும் ஆசாமிகளை உடனடியாகக் கழுவில் ஏற்ற வேண்டும். தனக்கும் திறமையின்றித் தன் தாழ்வு மனப்பான்மையால் பிறர் திறமையையும் பொறுக்க முடியாமல்... ச்சே! இவர்களை என்னதான் செய்வது? 'கல்கி'யின் அரைப்பக்கத்தில் கத்தித் தீர்ப்பதைத் தவிர!

ஆழ்வாரப்பன், குன்னூர்.

## சட்டத்தின்மேல் கோபம்!

எங்கள் வேதம் குர் ஆன் பெண்களுக்கு அளிக்கும் உரிமைகளைப் பெண்கள் அனுபவிக்க முடியாதபடியும், குர் ஆன் ஆண்களுக்கு அளிக்காத உரிமைகளை ஆண்கள் அனுபவித்துக் கொண்டிருக்கவும் செய்கிற 'ஷரி அத்' சட்டத்தின் மீது எனக்குக் கோபம். உதாரணமாக ஷரி அத் சட்டப்படி (குர்—ஆன் படி அல்ல) கணவன் விரும்பும்போது மனைவியின் சம்மதமில்லாமலேயே அவளை விவாகரத்துச் செய்ய முடியும். ஆனால் மனைவி அப்படிச் செய்ய முடியாது. கணவன் சம்மதித்தால் மட்டுமே விவாகரத்துச் செய்ய முடியும். ஆனால் குர் ஆன் ஆணுக்கும் பெண்ணுக்கும் சம உரிமை உண்டு என்கிறது! அதனால்தான் 'ஷரி அத்' மேல் எனக்குக் கோபம்!

எஸ். ஜி. எஸ். சுல்தான் ஜி, ஆத்தூர் (சேலம்).

**ப்ளோப்ளாஸ்ட் வழங்கும் வி. ஐ. பி. சூட்கேஸைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறும் அதிர்ஷ்டசாலி:**

Nalini Ramanathan,<br>
D – 68, R. K. V. Nagar,<br>
Erode – 638 003.






மின்னி மிளிரும் மேனி...
என்னாளும் உங்கள்
பொன்னான கனவு...நிறைவேற
வரமளிப்பது ரெக்ஸோனா.

சரளம், கருவா, கிராம்பு,
ஹபுஷா (தேவதாரம்) ஆகிய
நாலு வகை இயற்கைத்
தைலங்களின் நற்கலவை
யான ரெக்ஸோனா...சருமப்
பராமரிப்பிற்கு இயல்பான
வழியாகும்.

**ரெக்ஸோனா** உங்கள் மேனியை மென்மையோடு மெருகு மிளிர வைத்திருக்கிறது.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

LINTAS RX 84 2012 TM

இந்திராணியின் புகைப்படக் கண்காட்சிக்கு ஏற்பாடு செய்து கொண்டிருந்தார் சம்பத். இதைப் பற்றிச் சந்திரசூடனிடம் சொன்ன போது அவர் முகத்தைச் சுளித்தார்.

''அவள் இறந்த பிறகும் அவளுடைய படங்களைக் காட்டி மானத்தை வாங்க வேண்டுமா? உனக்கு அவளிடத்தில் என்ன கோபம்?'' என்றார்.

அப்போது, அருகிலிருந்த பரணி கேட்டான்: ''சம்பத் சார், ஒரு பெண்ணினுடைய கவர்ச்சிப் படங்களைக் கண்காட்சி அமைத்துக் காட்டுவதற்கு அவை என்ன உலக விசித்திரங்களைச் சேர்ந்தவையா, ஜனங்கள் பார்த்து வியப்படைவதற்கு?''

சம்பத் சிரித்தார். ''இந்திராணியின் படக் காட்சிக்கு வந்து பார். ஜனங்கள் மந்தை மந்தையாக வருவார்கள் பார். ஹைகோர்ட் நீதிபதிகளிலிருந்து ரிக்ஷாக்காரன் வரை வரப் போகிறார்கள்.''

சந்திரசூடன் குறுக்கிட்டுச் சொன்னார்: ''அவள் உயிரோடு இருந்தவரை நீ அவளைப் படம் பிடித்துச் சம்பாதித்தது சரி. அவளும் சம்மதித்தாள். அவள் இறந்த பிறகு அவளுடைய படங்களை நீ பயன்படுத்துவது தவறு.''

''இந்திராணியின் புகழுக்குக் காரணமே அவளுடைய கவர்ச்சிதானே. அந்தக் கவர்ச்சியை உலகத்திற்கு எடுத்துக் காட்டியவன் நான். நான் இல்லையென்றால் அவளுக்கு இத்தனை புகழ் ஏது?'' என்றார் சம்பத்.

சம்பத்தை அவளுக்கு முதன் முதலில் சந்திரசூடன் அறிமுகப்படுத்திய வேளையில் இந்திராணிக்கு இவ்வளவு புகழ் இல்லை. சினிமாவில் கவர்ச்சியாகத் தோன்றி ஓரளவு ரசிகர்களைக் கவரத் தொடங்கியிருந்த நேரம். அப்போதுதான் சந்திரசூடன், அவளைப் பற்றிய விமர்சனங்களை எழுதி வந்தார். அவளுடைய கவர்ச்சியைக் குறைகூறி எழுதிக் கொண்டிருந்தார். அப்போது ஒரு நாள், சம்பத், ''அந்த இந்திராணியிடம் என்னை அறிமுகப்படுத்தி வையேன்,'' என்றார்.

சம்பத்தை அவளுடைய வீட்டிற்கு அழைத்துச் சென்ற போது அவள் கோபத்துடனிருந்தாள். சந்திரசூடன் தம்முடைய பத்திரிகையில் அவள் நடித்திருந்த சினிமாப் படம் ஒன்றை விமர்சித்திருந்தார் — ''உடல்தான் பளிச்சென்று தெரிகிறது. படத்தில் நடிப்பை விட உடலின் அசைவுகள்தாம் பிரதானமாயிருக்கின்றன. நடிக்கவும் தெரிந்திருந்தால் வருங்காலம் பிரகாசமாயிருக்கும்,'' என்று எழுதியிருந்தார்.

சந்திரசூடன் அவளுடைய வீட்டிற்குள் நுழைந்ததுமே அந்தப் பத்திரிகையை அவர் முன்பாக மேஜை மீது வீசி, ''நீங்கள் எதை எழுதினாலும் உங்கள் பத்திரிகையில் அச்சாகும் என்பதற்காக மனத்தில் தோன்றும் குப்பைகளையெல்லாம் எழுதிவிடுவதா? உங்கள் பத்திரிகையையே விலைக்கு வாங்க என்னால் முடியும், தெரியுமா?'' என்று கோபத்தில் இரைந்தாள்.

சந்திரசூடன் சிரித்துக் கொண்டே, ''எங்கள் பத்திரிகை முதலாளி, அவருடைய பத்திரிகையை விற்க முடியும். ஆனால் என்னையும் சேர்த்து உனக்கு விற்க முடியாதே,'' என்றார்.

இந்திராணி அவருக்கு எதிரே வந்து நின்று கொண்டு, ''உங்களுக்கு என்ன விலை?'' என்று கேட்டாள்.

இதைக் கேட்டுச் சம்பத் குபீரென்று சிரித்து விட்டார். அவரைக் கவனித்த இந்திராணியின் கோபம் சட்டென்று மறைந்தது. சந்திரசூடனைத் திரும்பிப் பார்த்தாள்.

''போனில் சொன்னேனே ஒரு நண்பனை அழைத்து வருகிறேன் என்று; அவன்தான். பெயர் சம்பத். புகைப்படம் எடுப்பதில் கில்லாடி,'' என்றார் சந்திரசூடன்.

''ஏற்கெனவே ஸ்டுடியோக்களில் நிறையப் பேர் இருக்கிறார்களே'' என்றாள் அலட்சியமாக.

''அந்தக் கூட்டத்தோடு இவனையும் ஒரு ஆளாகச் சேர்த்துக் கொள்ளேன்'' என்று சிபாரிசு செய்தார்.

இந்திராணி ஓரக் கண்ணால் சம்பத்தைக் கவனித்தாள். காமிராவிற்குப் பழகிப் போன சம்பத்தின் கண்கள், அவளுடைய உடலமைப்பைக் கணிக்கத் தொடங்கின.

எதிர்காலத்தில் அவளுடைய கவர்ச்சி, சம்பத்தின் திறமையினால் ரசிகர்களின் உள்ளங்களை ஆட்டிப் படைக்கப் போகிறது என்றோ; சம்பத்தின் புகைப்படத் திறமை, அவளால் வெளிப்படப் போகிறது என்றோ அந்த முதற் சந்திப்பில் யாரும் உணரவில்லை.

ஆரம்பத்தில் ஒரு சினிமாப் படப்பிடிப்பிற்காக திருவனந்தபுரம் கடற்கரைக்குச் சென்றிருந்த போது, இந்திராணி குளிப்பதற்காக ஆள் அரவம் இல்லாத இடத்திற்குச் சென்றாள். துணைக்கு சம்பத்தைக் கூட்டிச் சென்றாள். அவள் குளிப்பதற்காகக் கடலில் இறங்கிய போது சம்பத், கரையில் ஒரு தென்னை மரத்தடியில் அமர்ந்து கதைப் புத்தகத்தைப் படிக்கத் தொடங்கினார். அவள் குளித்துக் கொண்டிருந்த போது அவளுக்குத் தெரியாமல் பல கோணங்களில் அவளைப் படம் பிடித்துவிட்டார். ஊர் திரும்பிய பிறகு ஒருநாள் அந்தப் படங்களை அவர் காட்டிய போது இந்திராணி திகைத்து விட்டாள்.

''நீங்கள் நம்பிக்கைத் துரோகம் செய்து விட்டீர்கள். உங்களை நம்பப் போய்த்தானே துணைக்கு அழைத்துச் சென்றேன். இப்படித் திருட்டுத்தனமாகப் படம்பிடிப்பீர்கள் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை,'' என்று கோபத்தில் இரைந்தாள்.

சம்பத் அவளைச் சமாதானப்படுத்தினார். ''எதிர்பாராமல் எடுக்கும் போதுதான் படம்

இயல்பாக அமையும். உயிரோட்டம் இருக்கும். இந்தப் படங்களைப் பாருங்கள். அஸ்தமனத்தின் பின்னணியில் நீங்கள் குளிக்கும் அழகு எவ்வளவு தத்ரூபமாக அமைந்திருக்கிறது! இப்படி எடுக்க வேண்டும் என்று முன்கூட்டியே திட்டமிட்டு ஆயிரம் முறைகள் எடுத்தாலும் இப்படி எடுக்கத்தான் முடியுமா?''

இந்திராணி படங்களைக் கூர்ந்து பார்த்தாள். படங்களில் அமைந்திருந்த அழகான சூழலை ரசித்தாள். மாலை வெயிலும், நிழலும் அவளுடைய உடலமைப்பின் பரிமாணங்களில் கலையைப் புகுத்தியிருந்த அற்புதத்தைக் கண்டு பிரமித்தாள்.

அவளுடைய உடலுக்கு இவ்வளவு கவர்ச்சியா? தினமும் குளியலறைக் கண்ணாடியில் அவள் பார்க்கும் உடல்தான். ஆனால் சம்பத்தின் காமிரா வழியாக அது ஊடுருவும்போது எவ்வளவு அற்புதமாகக் கவர்ச்சியைக் கொட்டிக் கொழிக்கிறது!

சம்பத் சொன்னார்: ''நீங்கள் ஏற்கெனவே புகழடைந்துவிட்டீர்கள். இப்போது என்னைப் புகழடைய வையுங்கள்,'' அவருடைய குரல் கெஞ்சியது.

இந்திராணி வியப்புடன் அவரைப் பார்த்தாள். பிறகு மேஜை மீது கிடந்த படங்களைப் பார்த்தாள். சம்மதித்து விட்டாள்.

அதற்குப் பிறகு சினிமா போஸ்டர்களிலும் பத்திரிகைகளிலும் புதுக்கவர்ச்சி தோன்றியது. தெருவில் நடமாடியவர்களை இந்திராணியின் போஸ்டர்கள் தடுத்து நிறுத்தின. சினிமாப் பத்திரிகைகளில் அவளுடைய படங்கள் இளவட்டங்களின் மனத்தைப் புரட்டி எடுத்தன.

சந்திரசூடனின் இன்றைய வருத்தமெல்லாம், இந்திராணி இறந்த பிறகு அவளுடைய படங்களைப் பயன்படுத்துவது பற்றித்தான். அவளோடு அவள் உடல் மீதிருந்த கவர்ச்சி மோகமும் மக்களிடமிருந்து அழிந்துவிட வேண்டும் என்று விரும்பினார்.

அவருடைய வாதங்கள் சம்பத்திடம் எடுபடவில்லை. ''நீ எண்ணுவது போல் இது வெறும் கவர்ச்சிக் காட்சியல்ல. இது ஒரு கலைக் கண்காட்சி. நீ வரும்போது பரணியையும் அழைத்துக்கொண்டு வா'' என்று கூறிவிட்டுச் சென்றார், சம்பத்.

சற்று நேரத்தில் சந்திரசூடன் வெளியே போகப் புறப்பட்டார். பரணியிடம், ''நீயும் வருகிறாயா, இந்திராணியின் கண்காட்சிக்கு?'' என்று கேட்டார்.

''சீச்சீ, அதைப் போய்ப் பார்ப்பதா?'' என்றான் பரணி. கூடவே அவனுக்குத்தான் முதல் நாள் கண்ட காட்சி நினைவு வந்தது. மனம் படபடத்து உடம்பெல்லாம் வியர்த்துக் கொட்டியதே! அதுவரை கண்டிராத காட்சிதான். ஆனால் காணக் கூடாத காட்சி. பார்த்துக் கொண்டே நின்றேனே. சட்டென்று விலகிப் போகத் தோன்றவில்லையே! பார்க்க வேண்டும் போல் தானே இருந்தது... அதென்ன காணக் கூடாத காட்சியா...?

## கார் வாங்குவது சுலபம்! கல்யாணம்தான் கஷ்டம்!



நம் நாட்டில் பெண்கள் ஆண்களுக்கு வரதட்சிணை கொடுத்துக் கல்யாணம் செய்வது போல சவுதி அரேபியாவில் ஆண்கள் பெண் வீட்டாருக்குப் பணம் கொடுத்துக் கல்யாணம் செய்ய வேண்டும்.

சாதாரணமாக ஒரு கல்யாணத்திற்கு மாப்பிள்ளை வீட்டாருக்கு ஒரு லட்சம் ரியால் வேண்டுமாம்; அதாவது கிட்டத்தட்ட மூன்று லட்ச இந்திய ரூபாய்.

பெண்களை அதிக விலை கொடுத்து வாங்கி (அதாவது அதிக வரதட்சிணை கொடுத்து) கல்யாணம் செய்து கொள்வதால் பெண்களை மிகவும் பாதுகாப்புடன் வைத்திருக்கிறார்கள்.

கார் வாங்குவது இங்கு மிகச் சுலபம், கல்யாணம் செய்வதுதான் கடினம்!

இங்கு பெண்கள் அதிகமிருக்கிற குடும்பம் பணக்காரக் குடும்பம்!

பெண்களுக்காக கடைத்தெரு, பாங்க் போன்றவை உள்ளன. பெண்கள் கல்லூரியில் பேராசிரியர் பாடம் நடத்துவதை ட. வி. மூலமாகத்தான் பார்க்க முடியும். பேராசிரியையாக இருந்தால் தான் நேரில் பார்க்க முடியும்!

கொலை, கற்பழிப்பு போன்ற குற்றம் செய்பவர்களை வெள்ளிக்கிழமை மதியம் (ஜும்ம் ஆ) பிரார்த்தனை முடிந்தவுடன் எல்லார் பார்வையிலும் படுமாறு வைத்துத் தலையை வெட்டுகிறார்கள்.

சவுதிக்காரர்கள் புதுப் புதுக் கார்கள் வாங்குவதில் சளைக்காதவர்கள்; பத்துப் பன்னிரண்டு வயதுப் பையன் கூட சர்வ சாதாரணமாக 'டிரைவ்' செய்து கொண்டு போவதைக் காணலாம்!

தொழுகை நடக்கும் நேரங்களில் அலுவலகங்கள், கடைகள் கட்டாயம் மூடப்பட வேண்டும். ட. வி. யில் கூட **'Prayer intermission'** உண்டு.

இந்தியர்களை 'மிஸ்க்கின்கள்' (பிச்சைக்காரர்கள், ஏழைகள் என்ற வகையில் பொருள்படும்) என்றுதான் சொல்கிறார்கள்.

—எம். ஜே. புகாரீன்.

# தேவேந்திரா சாரீஸ்

H.O. 27, ஏலா கந்தப்பன் தெரு, சென்னை-600 003.
போன்: 33113

கிளை ஷோ - ரும்:

**கடை எண் 7, ராம்ஸ் பஜார்**
**(பனகல் பார்க் எதிரில்)அருகில்)**
**தியாகராய நகர், சென்னை - 600 017**

தேவேந்திரா புடவைகள் கிடைக்கும் இடங்கள்:

* **காமாட்சி சில்க் ஹவுஸ்,** 5/38, W. E. A. அஜ்மல்கான் ரோடு, கரோல்பாக், புதுடில்லி—5. போன்: 581050, 561786. * **"திருமதி லக்ஷ்மி"** மாதர்கள் கூட்டுறவு அமைப்பு, C-79, விகாஸ்புரி (போடெல்லா). புது டெல்லி—110018. * **திருமதி உமாசுப்ரமணியம்,** II-A-97-B, லஜ்பத் நகர் II, புது டெல்லி—110024. போன்: 616552.* **திருமதிவிமலாராகவன்,** 6/66,W.E.A.கரோல்பாக்,புதுடெல்லி—110005. * **பங்கஜம்சுந்தரராஜன்,** C6/A,D.D.A.Flats,முனிர்கா,புதுடெல்லி—67.* Mrs. **சாரதா,** 16/449, வீரம் பில்டிங், மாதுங்கா, பம்பாய்—19. * **சிவாமணி,** 22, காந்தி மஹால், தேஜோ கோயா பார்க், வின்சென்ட் ரோடு, மாதுங்கா, பம்பாய்—19. * **லக்ஷ்மி நாராயணன்,** 5, வாணி கோ — ஆபரேடிவ் ஹவுசிங் சொஸைட்டி, வல்ல பாக் ரோடு, காட்கோபர், (கிழக்கு) பம்பாய்—77. * **நல்லிஸ் சில்க் சாரீஸ், சென்டர்,** 401, டெலாங் ரோடு, மாதுங்கா, பம்பாய்—19. * **சௌத் இந்தியன் கன்ஸர்ன்,** 401, டெலாங் ரோடு, மாதுங்கா, பம்பாய்—19. * **லதாகிருஷ்ணன்,** பிளாட் நெ. 20, காமதேனு கோ ஆப்: பெஸ்டம் சாகர், செம்பூர், பம்பாய்—89. (கிளாஸ் பாக்டரி அருகில்). * **ஜெயஸ்ரீ,** 2—A, தேசப் பிரியா பார்க் ரோடு, கல் கத்தா—26. * S. **பொன்னப்பன்;** 8—3—282, 2வது பஜார், செகந்திராபாத். போன்: 559562.* **திருமதி** T. S. **சகுந்தலா சீனிவாசன்,**18/1—A, லால்பாக் போர்ட் ரோடு,(மினர்வா & பஸப்பா சர்க்கிள் மத்தியில்) பெங்களூர் -4 போன்: 224357. **திருமதி துர்காம்பாள்,** 5-A,ராமசந்திரபுரம்,தென்னூர்திருச்சி* **திரு.** S. **சேதுராமன்** 9. பாணு துரை சன்னதி தெரு, கும்பகோணம்—612001, போன்: 972. * **ராணி சில்க்,** 13, மஹால் 4 வது தெரு, மதுரை—1. போன்: 26295.* **திருமதி** S. **லெட்சுமி,** 24, சீனிவாசா தெரு, சேலம்—1. (ரயில்வே ஸ்டேஷன் அருகில்).* **ஸ்ரீ காமேஸ்வரி ஏஜென்சிஸ்,** 6/175, திருச்சி ரோடு, (ஆல் இந்தியா ரேடியோ அருகில்), ராமநாத புரம், கோயம்புத்தூர்—641018. **ஸ்ரீ முருகன் கிளாத் ஸ்டோர்,** 3, ஆரோக்கியசாமி ரோடு கிழக்கு R.S. புரம், கோவை—2. * **மகாலட்சுமி சில்க் சென்டர்,** தீன் பில்டிங், (உள்புறம்) 175/11, மேல வீதி, சிதம்பரம். * **ஹேமாவதி ஏஜென்சிஸ்,** 2711, நாணயக்கார செட்டி தெரு, தஞ்சாவூர். * **பாகிரதிமூர்த்தி,** 100, ஸ்ரீ வராஹபுரம் தெரு, கல்லிடைக்குறிச்சி, திருநெல்வேலி. * S. **சுந்தரம்,** 9, சாத்தான் கோவில் தெரு, வடிவீச்வரம், நாகர்கோவில்—2. * **திருமதி** K. **சீதாலட்சுமி,** 41, 4வது டிரஸ்ட் கிராஸ் தெரு, மந்தவெளிப்பாக்கம், சென்னை—28. போன்: 73244. * **திருமதி சாவித்திரி பாலசுப்ரமணியம்,** 2, 7வது தெரு, நங்கநல்லூர், சென்னை—61, (பிள்ளையார் கோவில் அருகில்) போன்: 433737.* **திருமதி சரோஜா கிருஷ்ணமூர்த்தி,** A9/386, புதிய குடியிருப்பு (முதல் மாடி) குடிசை மாற்று வாரியம், திருமங்கலம், அண்ணா நகர் மேற்கு, சென்னை—600 107. (ஸ்ரீ சத்திய சாயிபாபா கோவில் அருகில்). * M/s. **பாலாஜி கிளாத் சென்டர்**29, வெங்கடேச சௌத்ரி தெரு, மேற்கு தாம்பரம், சென்னை—45. * **திருமதி கமோசனா கோவிந்த்,** 2, M. I. T. லெவல் கிராஸிங், குரோம்பேட்டை, சென்னை—44.

குறிப்பு: மற்ற இடங்களில் வாங்குவது எங்களுடைய தயாரிப்பு அல்ல.

'இடம்கொண்டு, விம்மி, இணைகொண்டு இறுகி...'

மனம் அசைபோட்டது. கண்கள் மூடியிருந்தன. ஆனால் மனத்தில் அந்தப் படம் மறையவில்லை; குறுகுறுப்பும் குறையவில்லை.

'எனக்குப் பக்தி வரவில்லையே! கும்பிடக் கூடத்தோன்றவில்லையே! அபிராமிபட்டரும், சங்கரரும் பக்திப் பரவசமாகிப் பாடினார்கள் என்கிறார்களே; எனக்கு ஏன் பக்தி தோன்றவில்லை? நெஞ்சில் குறுகுறுப்பல்லவா இருந்தது? அந்தக் காட்சியில் பக்தியா தோன்றும்? பக்தி தோன்றினால் அப்படிப் பாடத் தோன்றுமோ? அப்படிப் பாடத் தோன்றும் போதுதான் அந்தக் காட்சியைக் காண வேண்டுமோ? அவர்கள் அம்பாளை அந்தக் கோலத்திலா கண்டிருப்பார்கள்? அம்பாளே அவர்களுக்கு முன்பாக அவ்விதம் தோன்றினாளோ? தோன்றினால் கூட அவர்கள் ஏன் இப்படித் தத்ரூபமாக வர்ணித்தார்கள்? பக்தியில் இதுவும் ஒருவகையோ? எனக்குப் பக்தியா...? பாடத் தோன்றவில்லையே... ஓ...!'

பரணி குழம்பிப் போய்த் தலையை இறுகப் பற்றிக் கொண்டான். மண்டை வெடித்து விடும் போலிருந்தது. தன்னுடைய பிரும்மச்சரியமே உள்ளூர நொறுங்கிச் சிதைந்து விட்டதாக எண்ணி மருகினான் —

முந்தின நாள் இரவு, படித்துக் கொண்டிருந்த போது தண்ணீர் குடிப்பதற்காகத் திண்ணையிலிருந்து எழுந்தவன், பார்வதியின் வீட்டு முன் அறையில் விளக்கு அணைந்திருந்ததைக் கண்டான். ஆனால் உள் அறையில் விளக்கொளி தெரிந்தது. வெளிச் சன்னல் வழியாக அவனுடைய பார்வை உள்ளே சென்றது. உள் பக்கத்து அறையில் அப்போதுதான் பார்வதி தன் உருவத்தைக் கண்ணாடியில் முழுமையாகக் கண்டு இந்திராணியின் கவர்ச்சியோடு ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

பரணி இமைகப்புற்றவனைப்பார்த்தபடியே சிலையாக நின்றான். திடீரென்று பயம் தோன்றவே, சன்னலிலிருந்து விலகித் திண்ணையில் போய் அமர்ந்தான். உடல் நடுங்கிக் கொண்டிருந்தது. எத்தனையோ விதமான உணர்வுகள் மனத்தைப் புரட்டி எடுத்தன. பயம், வியப்பு, ஆவல், பரபரப்பு எல்லாமாகச் சேர்ந்து அவனைச் சோர்ந்துவிடும்படி செய்து விட்டன —

'நல்லவேளை நான் பார்த்துவிட்டது யாருக்கும் தெரியாது. சேச்சே, எவ்வளவு பெரிய தவறு செய்துவிட்டேன். தெரியாமல் நேர்ந்து விட்ட ஒன்றுதான். அதற்கு நான் பொறுப்பில்லையே...'

மனத்தைச் சமாதானப்படுத்திக் கொண்டான்.

(தொடரும்)



# தீராத விளையாட்டு ஸாயி

ரா. கணபதி

### 13. மனத்தை உயர்த்தும் மாண்பு லீலை!

> ஆண்டவன் ஜகமாகிய ப்ரம்மாண்டத்தில் விளையாடுகிறான்; ஜீவனாகிய பிண்டாண்டத்திலும் விளையாடுகிறான்!
>
> — ஸதாசிவ ப்ரம்மேந்த்ரர்.

ஸ்வாமியின் விளையாடல் விளைத்துள்ள பேரற்புதம் என்னவெனில், எப்படியெப்படியோ இருந்த எத்தனையெத்தனையோ மனித மனங்களைத் துலக்கித் தூக்கிவிட்டிருப்பதுதான்! 'அவரால்தான் நாஸ்திகத்திலிருந்து ஆஸ்திகத்துக்கு வந்தேன்'; 'உலகிய லின்பத்திலிருந்து என்னை ஆன்ம நினைப்புக்குத் திருப்பியவர் அவர்தான்'; 'ஸ்வய நலமே கருதிய என்னை ஈகையிலும் பொதுத் தொண்டிலும் செலுத்தியது அவரே'; 'வறண்டு கிடந்த என் நெஞ்சில் அன்பின் ஊற்றை அகழ்ந்து கொடுத்தவர் அவர்தான்'; 'கடமையின் கடுமையிலிருந்து ஓடிய எனக்கு அவர் கடுமையையே மென்மையாக்கிப் பொறுப்புணர்ச்சியூட்டினார்'; 'சோம்பிச் சோர்வுற்றிருந்த என்னைச் சுறுசுறுப்பாக்கிச் சோபையுற வைத்தவர் அவரே'; 'ஒன்றுமில்லாததற்கெல்லாம் விசாரப்பட்டுக் கொண்டிருந்த நான் அவரால்தான் நிம்மதியும் நிச்சிந்தையும் பெற்றேன்'; 'அஞ்சியும் அழுது கொண்டும் கிடந்த எனக்கு அவர்தான் அஞ்சாநெஞ்சும் ஆனந்த உத்ஸாஹமும் அள்ளித் தந்தார்'; 'மனம் போனபடி இருப்பதே ஸ்வதந்திரம் என்றெண்ணி வந்த எனக்கு ஒழுக்கத்தில் கட்டுப்பட்டிருப்பதே உண்மையான ஸுகம் தரும் உயர் ஸ்வதந்திரம் என்று அவர் காட்டிக் கொடுத்துவிட்டார்' — என்றிப்படியும், இன்னும் பல விதத்திலும், ஆயிரமாயிரம் பேர் ஸாயிராமின்மாபெரும்ஸாதனைக்குச்சான்று கூறி எழுதியுள்ளனர்.

இது தனி மனித ரீதியில். இதற்கு மேலும் பகவானின் பணி விளையாட்டாகவே விரிகிறது. 'சண்டையும் சச்சரவுமாக இருந்த எங்கள் வீட்டில்ஸௌஜன்யதீபத்தை அவரே ஏற்றி வைத்தார்' என்று, ஒரு குடும்ப ரீதியில் அவர் பல மனங்களை அன்பில் பின்னி வைப்பதற்கும் அநேக ஸாக்ஷியங்கள் உண்டு. மன இசைவு போதாத-தம்பதியர், பெற்றோர் — குழந்தைகள் ஆகியோர் மட்டுமின்றி அலுவலகத்தில், பொது ஸங்கங்களில் பேதமுற்றுப் பிரிந்து நின்ற பலரையும் பிணைத்திருக்கிறது விளையாட்டாகவே வலை வந்த ஸாயி சக்தி.

இதன் மிக அதிசயமான எவரெஸ்டாக இரண்டைச் சொல்லலாம். முதலாளி — தொழிலாளி என்ற வர்க்க பேத உணர்ச்சி இக்காலத்தில் எப்படி ஆழ வேரோடியிருக்கிறது? இந்தக் 'காழ்ப்புச் சூழலில் ஸ்வாமியின் பக்தர்களான தொழிலதிபர்களில் சிலரது தொழிலகங்களில் இவ்விரு சாராரும் ஸோதரராக ஒருவரையொருவர் சார்ந்து, சேர்ந்து, ஸ்ட்ரைக், லாக்—அவுட் எதுவுமின்றிக் கடமையை ஆற்றிவருவதைப் 'பாலை விலேசோலை' என்றால் அது உபசாரவார்த்தை இல்லை. ஸாம்பிளாக ஒன்று பாருங்கள்: ஐ. என். டி. யு. ஸி. தொழிற்சங்கம் மத்ய அரசுக்கு இசைந்தே செயலாற்றும் என்பது வாஸ்தவமாகவே இருக்கட்டும். எனினும் கூட அதைச் சேர்ந்த பெரம்பூர் ரயில்வே ஊழியர்கள், 'நாங்கள் வேலை நிறுத்தம் செய்

வதில்லே என்று பாபாவிடம் கூட்டு ப்ர திக்ஞை செய்யுமளவுக்குச் சென்றிருக்கிறார் களெனில் அது ஸாதாரண விஷயமல்லவே! 'ஏதோ என்னைப் பார்த்த உணர்ச்சிப் பரவசத் தில் இப்படிச் சொல்லி விடாதீர்கள். சொன்னபடி செய்ய முடியுமா என நன்கு யோசித்துக் கூறுங்கள். வாக்குறுதிகள் வார்த் தையாகவே காற்றோடு கரைந்துவிடும் காலம் இது என்று எனக்குத் தெரியும்' என்று ஸ்வாமி சொல்லியும், அவர்கள் ஏகோபித்து, 'செயலி லேயே பார்த்துக் கொள்ளுங்கள் ஸ்வாமீ, எங்கள் சொல்லே!' என்று உத்ஸாஹமாக உத்தரவாதம் தருகிறார்கள்! மஹத்தான விஷ யம் அல்லவோ?

இன்னொரு எவரெஸ்ட்: கல்லூரி முதல் வர் — ஆசிரியர்கள் ஆகிய தரப்புக்கும் மாண வர் தரப்புக்குமிடையே ஏற்பட்டுள்ள மனோ பேதத்தையும் ஸாயி மருந்து குணப்படுத்துவ தாகும். பொதுவாக, மாணவர்களுக்கு மாற்றுத் தரப்பிடம் ஏற்பட்டுள்ள ஆழ்ந்த வெறுப்புக்கும், இவர்களது அடங்காமையி னால் மறுதரப்பினர் இவர்களிடம் கொண் டுள்ள அச்சத்திலேயே அவர்களுக்கு ஏற் பட்டுள்ள த்வேஷத்துக்கும் செய்தித்தாள்கள் அன்றன்றும் சான்றுகள் கொடுக்கின்றன. இதற்கு ஆறுதலாக, அமிழ்தமாக ஸாயிக் கல்லூரிகளில் நாம் காண்பதை உலக அற்புத மென்றே சொல்லிவிடலாம். அங்கு படிப் பறையிலே, பஜனைக் கூடத்திலே, தொழிற் பட்டறையிலே, பொதுப் பணிக் கூட்டத்திலே — இவையாவற்றுக்கும்மேலாக இதய அந்தரங் கத்திலேயே — ஆசிரியர்களும் மாணவர்களும் ஒரே ஸாயித் தாயின் சேய்களாக இணைந்து பிணைந்து இனிக்க வாழ்கிறார்கள்!

ஸரி, இப்படி மனம் துலக்கப்பட்ட தனி மனிதர்களாகட்டும், அல்லது ஒரு கூட்டமா கட்டும் எப்படி ஸாயி வட்டத்துள் புகுந்தார் கள்? — அல்லது திருத்தமாகச் சொல்வதா யின், ஸாயி இந்த வட்டங்களில் எப்படிப் புகுந்து ஒட்டிக் கொண்டார்? — என்று பார்த் தால்,

பெரும்பாலும் அது ஏதோ ஒரு அற்புத விளையாடல் மூலமேயிருக்கும்.

இன்று நூற்றுக்கணக்கான தக்ஷிண ரயில்வே ஊழியர் ஸங்கத்தினர் ஸ்வாமி யின் அன்பில் ஸங்கமித்திருப்பதற்கு உற் பத்தி ஸ்தானம் எது என்று தேடிக் கொண்டு போனால், அது என்றோ இருபது முப்பதாண் டுகளுக்கு முன் ஸங்கத் தலைவர் ஸ்ரீ. டி. வி. ஆனந்தனுக்காக அவர் நிகழ்த்திய ஓர் அருள் விளையாட்டில்தான் கொண்டு விடுகிறது!

* * * * *

* சென்ற நவம்பரில் கண்ட அந்தப் பேரதி சயத்தை என்ன சொல்ல?

**புகை நடுவினில் தீயிருப்பதைப்**

**பூமியிற் கண்டோமே!**

என்றால், மெய்யாலுமே கண்டோம். புகை யும் தீயும் பஞ்சாப் — ஹரியானா மாநிலங் களைக் கவ்விச் சூழ்ந்திருந்த போது, அந்த த்வேஷப் புகை — தீக்களுக்கிடையே ப்ரேமை யின் பொங்கு புனலும் கண்டோம்.

**பகை நடுவினில் அன்புரு வானநம்**

**பரமன்-வாழ்கின்றான்.**

என்று திண்ணமாய் நாம் தெளியுமாறு ஒன்று நடந்தது.

ஸ்ரீமதி இந்திராகாந்தியின் இன்னுயிர் பகைப் பேய்க்கு பலியானவுடன் அம்மாநி லங்கள் தீப்பற்றி எரிந்தன அல்லவா? அப் போது குர்காவ் (Gurgaon) சேரியொன்

## ஹெல்மெட்டால் வந்த வினை!

கடந்த 25.8.85 அன்று ஈரோடு வாசவி கல்லூரி அருகில் 'டிவேகா மொபட்'டில் ஒரு கணவன் — மனைவி ஜோடி சென்று கொண்டிருந்தார்கள். சிறிது தூரத்தில் கார் மற்றும் லாரிகளால் 'டிராபிக் ஜாம்' ஏற்பட்டிருந்ததைப் பார்த்த கணவர் வண்டியை மெதுவாக ஓட்டிச் சென்று கொண்டிருந்தார். அருகில் சென்றதும் வழி இல்லாததால் 'மொபட்' சிறிது ஆடியது. இதனைக் கண்ட, பின்னால் அமர்ந்திருந்த அவர் மனைவி வண்டியி லிருந்து இறங்கி விட்டார்.



அவர் இறங்கியது கணவருக்குத் தெரியவில்லை. சிறிது இடம் கிடைத் ததும் அவர் பறந்து சென்றுவிட்டார்! அவர் மனைவி 'ஐயோ... ஐயோ... என் னங்க...' என்று கூக்குரலிட்டவாறு பின்னாலேயே ஓடினார். ஆனால் இதெல் லாம் 'ஹெல்மெட்' போட்டிருந்த அவ ருடைய காதுகளுக்குக் கேட்கவே இல்லை! பாவம்! அவர் மனைவி அழ ஆரம்பிக்க... அருகில் உள்ள இடத்தில் வேலை செய்தவர்கள் அவரைச் சமாதானப் படுத்தி உட்கார வைத்திருந்தனர். இதற் கிடையில் அவர் கணவர் 'சித்தோடு' வரை சென்று விட்டுப் பின்னால் மனைவி யில்லாததை உணர்ந்து திரும்பி வந்தார். அங்கு தன் மனைவியைப் பார்த்ததும்தான் அவருக்கு மூச்சே வந்தது போலிருக் கிறது! சமாதானம் சொல்லி அழைத்துச் சென்றார்.

— சூரிய நிலா.


30,00,000
அன்பர்கள் அன்றாடம்
நரசுஸ் காபியை அருந்துவதே
அதன் தரத்திற்கு சான்று.
ஜீவனுள்ள ஒரே காபி!
நரசுஸ்
தெர்மலோ முறை காபி!
நரசுஸ்
காபி கம்பெனி
சேலம் 636 007.
கிளைகள்: தமிழ்நாடெங்கும்.
ADWAVE NCC 2956

றில், எரிகிற கொள்ளியில் எண்ணெய் வார்ப்பதற்காக ஒரு லாரி வந்தது. கெரஸின், பெட்ரோல் லாரியல்ல. மதுப் புட்டிகள் அடங்கிய லாரிதான். பாமரப் பட்டிக்காட்டு மக்களின் பகையுணர்ச்சிக் கொள்ளிக்கு எண்ணெயாக மதுவை வார்த்தே அவர்களை வெறியில் கிளப்பி விடுவதுதான் குண்டர் தலைவர்களும் தொண்டர்களும் கையாண்ட உபாயம். அம் மாதிரி இச்சேரி மக்களை நுந்திவிடவே மது லாரி வந்தது. அது சேரியில் புகுமுன்பே சேரி ஜனங்கள் அதைச் சூழ்ந்து கொண்டு நிறுத்தினர். அவர்கள் காட்டிய ஆக்ரோசம், அப்பப்பா!

யாரிடம் ஆக்ரோசம் தெரியுமா? அந்த மதுப்புட்டிகளிடமேதான்!

ஆம், விலையுயர்ந்த அந்த அயல் நாட்டு மதுவகையை விடக் கோடி மடங்கு மதுரமான ஸாயி பக்திச் சுவையை அறிந்தவர்களாக்கும் அச்சேரி மக்கள்! அது ஸாயி ஸமிதி தத்து எடுத்துக் கொண்ட சேரி. நல்வாழ்வின் நாலு ஆதார ஸ்தம்பங்களாக ஸாயிநாதன் நாளும் நவின்று வரும் ஸத்ய-தர்ம-சாந்தி — ப்ரேமைகளைத் தழுவ முனைப்புப் பெற்றவர்கள் அச்சேரி மக்கள். எல்லா மதங்களையும் மதித்து,

> ஸர்வ தர்ம (ஸமய) ப்ரிய ஸாயி ஹரே —
> குரு நானக் யேஸு புத்த ஹரே.

என்று பஜனை பாடுபவர்கள். 'மதுவைத் தீண்ட மாட்டோம்!' என்று தங்கள் தலைவர்களான ஸார்பாஞ்ச்களிடம் ப்ரதிக்ஞை செய்தவர்கள்.

அந்த விசேஷம்தான், மற்ற இடங்களெல்லாம் மதுப் பெருக்கிலும் ரத்த வெள்ளத்திலும் மிதந்து கொண்டிருந்த, வெறிப்புயல் வீசும் பொழுதில், இவர்கள், ''ஸாயி வாழும் எங்கள் சேரிக்குள் மது லாரி வரவிட மாட்டோம்'' என்று எல்லையிலேயே அதை நிறுத்தினர்.

சேரி மக்களின் ஸாயி நாம பஜனை சக்தியில் குண்டர்களின் அரக்கத்தனம் 'கப்சிப்' என்று அடங்கிவிட்டது!

> ''பிய பியாலா அமர் ரஸ் கா
> சட் கயீ கூம் குமாய்.''
> (அமுத ரஸத்தை ஐயன் அன்பில்
> குமு குமு மாந்தி போதையுற்றேன்)

என்று சேரி ஜனங்கள் பாடியவாறு ஒவ்வொரு மதுப்புட்டியாக எடுத்து, தங்கள் சேரி எல்லையிலேயே உடைத்து, கழிவு காலில் கள்ளை ஓடச் செய்தார்கள்!

ஸமூக விரோதிகள் தோல்வியுற்றுத் திரும்பினர்கள்!

இப்படியோர் அற்புதமாக அந்தப் பட்டிக்காட்டார் பர்த்திநாதனிடம் ஈடுபட்டதற்கு என்ன காரணம்? ஸோதரரொருவர் காரணம் கேட்ட போது ஸார்பாஞ்ச் சொன்னர்: ''யேஸ்வாமி தோ கித்னே படே படே சமத்கார் கர் ரஹே ஹைங் ஹாய் ஸாயி! இத்தா ஸா சோடா கிலாஸ் கா தூத் ப்ரசாத், ஔர் இஸே ஸைகடோம் கோ பட்வாதே ஹைங்! இத்நீ ஸீ அகர் பத்தி கோ ஸாரீ ராத் கோ ஜல்வாதே ஹைங், கைஸா அஜப் கா காம் ஹைங்!'' (''இந்த ஸாமி இன்னு இன்னு அற்புதம் பண்றுரு? அட யெஞ் சாயி! தம்மாத்தூண்டு லோடாவிலே இருந்த பிரசாதப் பால் நூத்துக்கணக்கானவங்களுக்குப் பத்தற மாதிரி வள்ரப் பண்றுரு! துக்குளியூண்டு ஊதுவத்தி ஒரு ரா முச்சூடும் எரியற மாதிரிப் பண்றுரு!'')

பார்த்தீர்களா சிறிய லீலா விநோதம் சாதித்த ஸாதனையை? ஒரு லோடாப் பால் ஒரு லாரி மதுவை அடித்துக் கொண்டு போகிறது! ஒரு சிறு ஊதுபத்திப் புகை பர்த்திநாதனின் பக்தி மணம் பரப்பி, த்வேஷப் புகையின் துர்நாற்றத்தைத் துரத்துகிறது!

* * * * *

* பங்க்ளாதேச எல்லையிலிருந்து இருநூறு அடிகளில் உள்ள ஒரு சிற்றூர். ''D'' என்பதற்கு மேல் வெளிப்படப் பெயர் குறிப்பிட முடியாத க்ராமம். ஏனெனில் சுற்றுவட்டம் முழுதும் ரஹஸ்யக் காவலரின் கண்காணிப்பிலுள்ள கள்ளக் கடத்தல் பகுதிகளாகும். D—யும் அப்படிப்பட்ட ஒரு சட்ட விரோதப் பாசறையாயிருந்ததுதான். ஆனல் பிற்பாடு சுற்றுப்புற ஊர்கள் நாகங்களாக விஷத்தைக் கக்க, D மட்டும் நாக ரத்னத்தைக் கக்கத் தொடங்கிவிட்டது! 'ரத்னுகர ராஜு' வம்சத்தில் பிறந்த ஸாயிராஜனின் நாம ரத்னம்தான் D—யை இப்படி உரு மாற்றிற்று! அன்புக்கும், உண்மைக்கும், ஒழுக்கமான நேரிய வாழ்வுக்கும் அநாமதேய க்ராமம் உதாரணமாயிற்று. இதற்கு அடிப்படை; அம்மக்கள் ஸாயி நாமத்தில் ஈடுபட்டதெனில், அவ்வாறு நாமத்தில் அவர்கள் ஈடுபட்டதற்கு என்ன காரணம்? அக்கிராமத்தின் ஆரம்பப் பள்ளியாசிரியரான பீம் ஸேனுக்கு ஸாயிநாதன் புள்ளி வைத்து, தமது அருள் விளையாட்டுகளை அவருக்கு அள்ளி வீசியதுதான்! அவர் மூலம் அவ்வூர் முழுதையும் நல்வழியில் வளைத்துக்கொண்ட நாதர் இன்று அம்மக்களை எப்படியெல்லாம் காக்கிருர் தெரியுமா? ''எங்க கெராமத்துலேருந்து திருடங்க எதிணுச்சும் திருடிக்கிட்டுப் போனு, அவங்களுக்கு துரதிஸ்டம் வந்துடுதுங்களாம்! திருடினதைத் திரும்பக் கொண்டு வந்து போட்டுட்டுப் போயிடறுனுங்க!'' என்கிருள் ஊர்க் கிழவி ஒருத்தி!

இதையும் ஒரு விளையாட்டாய்ச் சிரித்து மகிழும்படிதானே செய்திருக்கிருர்?

(தொடரும்)

---

*. லண்டனில் புகழ்பெற்ற வாசக சாலையில் எல்லாச் செய்தித் தாள்களையும் 'சுவையான கற்பனைக் கதைகள்' என்ற பகுதியில் வைத்திருக்கிருர்கள்.

—தகவல்: ஏ. கே. நாசர்.

# ஜாதிகள் இருக்குதடி பாப்பா

பள்ளிக்கூட மைதான முகப்பில் லவுட் ஸ்பீக்கர் வைத்திருந்தார்கள். பாப்பா, பாப்பா கதை கேளு, 'பட்டுப் பூச்சி, பட்டுப் பூச்சி பாப்பா' எல்லாம் காற்றில் மிதந்தன. இலக்கில்லாமல் அலைந்து விழாவிற்காகச் சேர்ந்து கொண்டிருந்த பெற்றோர்கள் காதுகளில்நுழைந்தன. பிரேமா கூட்டத்தில் அப்பா தெரிகிறாரா என்று பார்த்தாள். நூறு தடவை சொல்லியிருந்தாள், அப்பாவிடம்.

''இன்னிக்கு அனுபமாவும், நானும் ப்ரைஸ் வாங்கப் போறோம்பா. எல்லா பேரண்ட்ஸும் இன்னிக்கு வராங்க. எனக்குத்தான் அம்மா இல்லியே. நீங்களாவது வாங்கப்பா.''

''வேலை இல்லேன்னா அவசியம் வரேண்டா கண்ணு.''

அப்பா வந்துவிடுவார் என்றுதான் தோன்றியது. இன்னொரு முறை அந்த மைவிழிகளால் சுற்றுமுற்றும் பார்த்தாள். அப்பா ஏதாவது ஒரு மூலையில் இருப்பார். ப்ரைஸ் வாங்கும் போது மேடையிலிருந்து பார்க்கலாம் என்று நினைத்துக் கொண்டாள்.

''ஏய் அனுபமா உங்கம்மா வந்திருக்காங்களாடி?''

அனுபமாவிற்குக் குண்டு முகம். குறுகிய மோவாய். கரும்பளிங்குக் கண்கள். சின்னச் சின்ன வரிசையான பற்களைக் காட்டிச் சிரித்தாள்.

''போப்பா. நீ பேசறதே எனக்குப் புரிய மாட்டேங்கறது. அம்மாவும் வருவா. அப்பாவும் வரா! வராளோ இல்லியோ எங்கிட்ட அப்படித்தான் சொல்லியிருக்காப்பா.''

''நாமப்ரைஸ் வாங்கறதுக்குள்ளே அவுங்க வந்துட்டா நல்லாயிருக்கும்பா'' என்றாள் பிரேமா. தலையை ஆட்டும் போது இரட்டைப் பின்னலில் ஒரு பின்னல் முன்னால் விழுந்து புரள, ''ஒனக்கு இந்த ரெட்டைப் பின்னல் ரொம்பப்ப அழகாயிருக்குப்பா'' என்றாள் அனுபமா.

அதற்குள் மேடையில் பரபரப்பு. மேடையில் காலியாய் இருந்த நாற்காலிகள் நிரம்பிப் போயின.

'முதலில் கடவுள் வாழ்த்து' என்று அறிவித்தார்கள். முன்னால் உட்கார்ந்திருந்த குழந்தைகள் உட்பட அத்தனை பேரும் சுசுசு, சரசர என்று ஒலியெழுப்பி எழுந்தார்கள்.

பிறகு பெற்றோர் சங்க செக்ரட்டரி எழுந்து குழந்தைகள் படிப்பதற்குப் பெஞ்சுகள், போட வேண்டும் என்றார். தரையில் உட்கார்வது அவர்களுக்குக் கஷ்டமாக இருக்கும் என்றார். பாத்ரூம்களைச் சுத்தமாக வைத்திருக்க வேண்டியதன் அவசியத்தைச் சொன்னார்.

கரெஸ்பாண்டென்ட் அவையெல்லாம் எப்படி சாத்தியமாகாது என்று சர்க்கரை தோய்த்த வார்த்தைகளில் சொல்லிவிட்டுச் சோடா குடித்தார். சிறப்பு விருந்தினர் ஒரு தர்ம சங்கடத்துடன் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தார்.

கடைசியில் அவரைப் பரிசு கொடுப்பதற்காகக் கூப்பிட்டார்கள்.

''பிரேமா... ஒப்பித்த போட்டி, ஃபர்ஸ்ட் ப்ரைஸ்'' என்ற குரல் ஸ்பீக்கரில் வழிந்தது.

''பிரேமா... போப்பா... ஓடுப்பா'' என்று புஜத்தைத் தொட்டாள் அனுபமா.

பிரேமா எழுந்து கூட்டத்தில் வழி பண்ணிக் கொண்டு ஓடியது. சிறப்பு விருந்தினர் பரிசுப் பொருளைக் கையில் ஏந்திக் கொண்டு குட்டிக்கால்கள் வைத்து ஓடிவந்த பிரேமாவை ஆவலுடன் பார்த்தார். பாரதியார் கவிதைகளைக் கொடுத்திருந்தார்கள் பரிசாக. இந்தச் சின்ன மனத்திற்குப் பாரதியார் கவிதைகள் எவ்வளவு புரியும் என்று யோசித்தார். பக்கத்தில் பிரேமா வந்து சேர்ந்தவுடன் புத்தகத்தை அதன் குஞ்சுக் கைகளில் கொடுத்தார். கன்னத்தைச் செல்லமாய் ஒரு தட்டுத் தட்டினார்.

''வாழ்த்துக்கள்'' என்றார். பிரேமா வெட்கத்துடன், ''தாங்க்ஸ்'' என்றது.

''எந்த க்ளாஸ் படிக்கிறே?''

''ஃபோர்த் ஏ. மைதிலி மிஸ் கிட்ட.''

''வெரிகுட்...நீஎன்ன ஒப்பிச்சே...எனக்கு ஒப்பிச்சுக் காட்றியா?''

''ஓ'' என்று பிரேமா தலையை அசைக்க, காது ஜிமிக்கிகள் கூடவே அசைந்தன. கொஞ்சம் விறைப்பாய் நின்று கொண்டது. கையில் உடுக்கை ஏந்திய பாவனையுடன், அதை ஆட்டி ஆட்டி, 'குடு, குடு, குடுகுடு நல்ல காலம் பொறக்குது, நல்ல காலம் பொறக்குது' என்று பாரதியின் தீர்க்கதரிசனக் கவிதை ஒன்றை, உணர்ச்சிக் கோளமாய் நின்று சொல்லி முடிக்க, சபையில் யாவரும் காது பிளக்கக் கைதட்டினார்கள்.

பிரேமாவை வெட்கம், உடல் முழுக்க ஊவாமுட்களாய்க் குத்த மேடையிலிருந்து இறங்கினாள்.

''அனுபமா... ஃபோர்த் ஸ்டாண்டர்ட்... அதிக மதிப்பெண்களுக்காக முதல் பரிசு.''

பிரேமா நின்று திரும்பிப் பார்த்தாள். முகத்தில் லேசாய்க் குழப்பம் தெரிந்தது. அனுபமாவைப் பார்த்து ஓடினாள். அனுபமா முகத்திலும் லேசான குழப்பம்.

''டிராயிங்லதானப்பா நீ ஃபர்ஸ்ட்?'' என்று பிரேமா கேட்டது.

''சரி போ... ஓடுப்பா, ப்ரைஸ் வாங்கிட்டு வா! அப்புறம் பேசிக்கலாம்'' என்று அனுபமாவைப் பதில் சொல்ல விடாமல் துரத்தி அடித்தது.

அனுபமா மேடைமேல் ஏறியது. தயக்கத்துடன் சிறப்பு விருந்தினர் பக்கத்தில் போய் நின்றது.



**சுபா**





## கத்தி முனையில் நடந்த கல்யாணம்!

அந்த நாளில் ஒரு கலப்புத் திருமணம் என்றால் எளிதான காரியமா? அதை எளிதாக நடக்கத்தான் விடுவார்களா? காதல் திருமணம் — அதுவும் கலப்புத் திருமணம் — ஊரிலே பலத்த எதிர்ப்பு!

காதலர்கள் தேசபக்தர் சிதம்பரனாரைத் தஞ்சம் அடைந்தார்கள்.

வீட்டுக்குள்ளே கல்யாணம்! வாசலில் வரவேற்பவர்களோடு கூட வ. உ. சி.! அவர் கையில் சந்தனமா, பன்னீர்ச் செம்பா? இல்லை! கத்தி! ஆம்; வருபவர்கள் வரட்டும்! எதிர்ப்பவர்கள் வந்தால் ஒரே சீவு! என்று துணிந்து நின்றார். எதிர்ப்பவர் வரமுடியுமா? போலீஸ்தான் வந்தது! வந்த போலீஸையே வாசலில் பாதுகாப்புக்கு வைத்துக் கொண்டு கலப்புத் திருமணத்தைக் கனஜோராகச் செய்து முடித்தார்!

சொன்னவர்: வ. உ. சி. சுப்ரமணியம்.
கேட்டவர்: ஆர். பி. சாரதி.

---

"நீ எந்த ஸெக்ஷன்?"

"ஏ ஸெக்ஷன்... மைதிலி மிஸ் க்ளாஸ்!"

"பிரேமாவும், நீயும் ஃபிரெண்ட்ஸா?"

"க்ளோஸ் ஃப்ரெண்ட்ஸ்" என்று சொல்ல, சிறப்பு விருந்தினர் பரிசை நீட்டினார். அனுபமா மறுபடியும் தயங்கியது.

"இந்த ப்ரைஸ் எனக்கு எதுக்குக் குடுக்கறா?" என்று மெல்லிய குரலில் கேட்டது ஸ்பீக்கர் வழியே பரவ, சபையில் லேசான சிரிப்பு எழுந்தது.

"நீ ஃபோர்த் ஸ்டாண்டர்ட்லயே ஸ்கூல் ஃபர்ஸ்ட் வாங்கியிருக்க இல்ல... அதுக்குத் தான்..."

"என் டோட்டல் 450 தானே!"

"ஏய், அதிகப்பிரசங்கி, ப்ரைஸை வாங்கிக்கடி" என்று கோமதி டீச்சர் அழுத்தமான குரலில் சொன்னாள்.

"பிரேமாவோட டோட்டல் 470 மிஸ்."

"எங்களுக்குத் தெரியும், நீ ப்ரைஸை வாங்கிக்க."

"இதை நான் வாங்கிப் பிரேமாவுக்குக் குடுக்கணுமா?"

"வேண்டியதில்லேம்மா.... நீயே வெச்சிக்க..."

கூடியிருந்தவர்களிடையே லேசான சலசலப்பு, சருகின்மேல் பாம்பு ஊர்வது போல், பற்றிக் கொண்டது. சிறப்பு விருந்தினர் கோமதி டீச்சரைப் பார்த்தார். குழந்தையைப் பார்த்தார்.

"நீ என்ன சொல்றே பாப்பா?"

"இந்த ஃப்ரைஸ் பிரேமாவுக்குத்தான் கெடைக்கணும். நான் ட்ராயிங்லதான் ஃபர்ஸ்ட்."

"என்ன மேடம் சொல்றீங்க?"

"ஏய் அனுபமா, இது உங்க ஜாதிக் கொழந்தைங்கள்ல யார் ஃபர்ஸ்ட் வராங்களோ, அவங்களுக்குக் குடுக்கணும்னு சொல்லிக் குடுக்கப்பட்ட ப்ரைஸ்டி இது. உங்க ஜாதிப் பசங்கள்ல நீதான் ஃபர்ஸ்ட்! வாங்கிக்கோ."

"ம்ஹூம்... நான் மாட்டேன்... நீங்க என்னவோ சொல்றீங்க... பிரேமாதான் ஃபர்ஸ்ட். நான் ஃபர்ஸ்ட் இல்ல. எனக்குப் போய் ப்ரைஸ் கொடுத்தா பிரேமா என்ன நெனச்சுப்பா..."

"வாட் இஸ் தி கன்ஃப்யூஷன் மேடம்?" என்று நெற்றிச் சுருக்கங்களோடு கேட்டார் சிறப்பு விருந்தினர்.

"இவங்க காஸ்ட்காரர் ஒருத்தர் ஃபண்ட்ஸ் ப்ரொவைட் பண்ணி, இன்ட்ரெஸ்ட்டை, அவங்க காஸ்ட்ல யார் ஃபர்ஸ்ட் மார்க் வாங்கறாங்களோ, அவங்களுக்குக் குடுக்கணும்னு இன்ஸ்ட்ரக்ஷன் கொடுத்திருக்காரு...! ஏய் அனுபமா வாங்கிக்கடி.

"நீங்க என்னமோ சொல்றீங்க. நான் கொறைச்ச மார்க் வாங்கிட்டு இந்த ப்ரைஸை வாங்கிண்டா தப்பு இல்ல? படிப்புக்குத் தானே ப்ரைஸ்? பிரேமாவைப் பாக்கறச்சே என்னாலே ஃப்ரீயா பேச முடியாது. 'என்னை விடக் கொறைச்ச மார்க் வாங்கிட்டு ப்ரைஸ் அடிச்சிட்டியா?'ன்னு அவ கேக்கற மாதிரி இருக்கும்பா... நாங்க ரெண்டு பேரும் ஃப்ரெண்ட்ஸ். நாங்க எனிமீஸ் ஆறதுக்கு நீங்களே சொல்லிக் குடுக்கறீங்களே!"

சிறப்பு விருந்தினர் ஆடிப்போய்த் தொய்ந்து உட்கார்ந்தார். கோமதி மிஸ் செய்வதறியாமல் கைபிசைந்தாள். சபையில் மக்கள், மரத்துக் காக்கைகள் எல்லாம் பயந்து அலறிப் பறக்கிறாற்போல் கையைத் தட்ட ஆரம்பித்தார்கள்.

"அப், அப், அனுபமா... அப், அப் அனுபமா" என்று கோஷமிட ஆரம்பித்தார்கள்.

அனுபமா அவர்களின் கைத்தட்டலுக்கான காரணம் புரியாமல், அந்த மேடை நிலைமை புரியாமல் மேடையிலிருந்து கீழே இறங்கியது. ஓடிப் போய்ப் பிரேமாவின் தோளில் கைபோட்டுக்கொண்டது. "கா விட மாட்டியேடி?" என்று ஏழு கடல் எதிர்பார்ப்புடன் கேட்டது. பிரேமா கூச்சம் எதுவுமின்றி அனுபமாவின் கன்னத்தில் 'ப்ச்' என்று ஒரு முத்தமிட்டது.

ஜெபோவால்கிராமத்தில் ஸந்த்லோங் கோவாலின் எளிய பிரம்மசரிய அறையில் கூலரின் ஓசையைத் தவிர வேறு ஓசையில்லை. கனமான மௌனப் போர்வையில் தங்கள் எண்ணங்களை மறைத்தபடி தோஹ்ராவும் பாதலும் லோங்கோவாலும் தரையில் மெத்தை விரிப்பில் அமர்ந்திருந்தார்கள்.

''துருப்புச் சீட்டை வைக்க வேண்டிய சமயம் வந்துவிட்டது!'' என்றார் லோங்கோவால் இருவரையும் பார்த்து மெல்லிய குரலில்.

மற்றவர்கள் பதிலே சொல்லவில்லை.

''பாபா ஜொகிந்தர் ஸிங்குக்கு நாம் இன்னமும் பணிந்து,பேசாமல் இருப்பது ஆபத்து. பிந்திரன்வாலேயை அடக்கத் தெரியாமல் நாம் தவித்தது போதும். அவருடைய ஆவியைப் போல் எழும்பியிருக்கும் இந்த முதியவர் மறுபடிபிள்ளையின் ஏட்டையே திருப்பப் பார்க்கிறார். பெரியவர் என்பதால் தலைவர் பொறுப்பைக் கொடுப்பது போல் கொடுத்தோம். அனர்த்தமாகிவிட்டது. பயங்கரவாதிகளுக்கு அசுர பலம் வந்துவிட்டது. நாம் மீண்டும்தலையெடுக்கவே முடியாத அளவுக்கு நம்மை அது அமுக்கிவிடும்...''

# மௌனப் புயல்

தோஹ்ரா பார்வையை மட்டும் நிமிர்த்திக் கேட்டார்:

''நாம் ஏதாவது இப்பொழுது சொன்னால் என்ன ஆகும் தெரியுமா?''

''தெரியும்,'' என்றார் லோங்கோவால் குரலை உயர்த்தாமல்.

''அந்தக் கட்சியைச் சேர்ந்த யாரையும் நாம் தாக்க வேண்டியதில்லை. இறந்து போனவர்களின் பெயரைக் குறிப்பிட வேண்டியதில்லை. அவர்களுடைய பயங்கரவாத வழிகளுக்கு நம்மால் தூக்குக் கொடுக்க முடியாது என்பதை விளக்குகிறமாதிரி, இனிமேல் சிரோமணி குருத்வாரா பிரபந்தக் கமிட்டியிலிருந்து செயல்பட முடியாது என்று ராஜிநாமா செய்துவிடப் போகிறேன்.''

பாதலும் தோஹ்ராவும் யோசனையுடன் அவரைப் பார்த்தார்கள்.

''நிரந்தரமாக அதில் பிறகு நுழைய முடியாமல் போய்விடும்'' என்றார் தோஹ்ரா.

''எனக்கு அப்படித் தோன்றவில்லை. பஞ்சாபில் பொது ஜனங்கள் களைத்துப் போய்விட்டார்கள் தோஹ்ரா! அவர்களுக்கு இப்பொழுது அமைதி வேண்டும்—உடனடியாக. அமைதியை ஒத்திப் போடப் போட சீர்ப்படுத்த முடியாத நிலையாகிவிடும். டில்லியில் நடந்த டிரான்ஸிஸ்டர் பாம் விவகாரத்துக்குப் பிறகு நான் தீர்மானித்துவிட்டேன். நமது ராஜிநாமா உண்மையில் ஒரு துருப்புச் சீட்டு.''

''நம் நிலையை அது இன்னும் பலவீனப்படுத்தலாம்'' என்று பாதல் முணுமுணுத்தார்.

''மாறாகப் பலப்படுத்தலாம்!'' என்றார் லோங்கோவால் மெல்லிய குரலில்.

''அதையும்தான் பார்த்துவிடுவோமே! ஜனங்கள் அதை எப்படி வரவேற்கிறார்கள் என்று பார்ப்போம். பாபா ஜொகிந்தர் ஸிங்கும் அவருடைய ஆட்களும் ஜனங்களுடைய ஆதரவு பெற்றவர்கள் இல்லை. பயங்கரவாதிகளை எத்தனை நாட்கள் யாரால் ஆதரிக்க முடியும்? நாம் ராஜிநாமா செய்தால் மக்களின் பார்வை நம்மேல் திரும்பும். சமாதானத்துக்கு வழி செய்ய வல்லவர்கள் என்று நம்பிக்கை ஏற்படும்.''

மற்றவர்கள் இருவரும் இன்னும் தீர்மானிக்க முடியாத குழப்பத்தில் இருக்கிறார்கள் என்று லோங்கோவால் புரிந்து கொண்டார்.

மிருதுவான குரலிலேயே தொடர்ந்தார்:

''புதுதில்லியில் இருக்கும் அரசின் அணுகுமுறை இப்பொழுது வித்தியாசமானது. இளைய இரத்தம் இன்று அதிக வேகத்துடன் பிரச்னைகளைச் சமாளிக்க முயல்கிறது. இந்தப் புதிய திருப்பத்தை அங்கீகரித்து நாம் செயல்படாவிட்டால் நமக்கும் நஷ்டம் பஞ்சாபுக்கும் நஷ்டம். பயங்கரவாதிகளை நாம் கண்டிக்கா விட்டால், நம்முடன் சமாதான வார்த்தை பேச அரசு முன் வராது. ஹிந்து—சீக் ஒற்றுமை பஞ்சாபுக்கு அவசியமானது என்று நாம் வலியுறுத்தாவிட்டால் இந்திய மக்களுக்கு நம்மேல் அனுதாபமோ மதிப்போ இருக்காது. துவேஷத்தை வளர்த்து என்ன லாபம்? நமக்குப் பிரிவினை வேண்டாம். சில முட்டாள்கள் சொல்வதை நாம் ஆதரிக்கப் போவதில்லை!''

அவர்கள் யோசிக்கட்டும் என்று லோங்கோவால் சற்றுப் பேசாமல் இருந்தார்.

''பிரதமர் சமரசப் பேச்சுக்குத் தயாராயிருக்கிறார்...'' என்றார் மெல்ல.

''அதற்கு நாம் அவசரப்படக் கூடாது'' என்றார் பாதல் சட்டென்று. ''ஆனந்தபூர் ஸாஹப் தீர்மானங்களை முழுவதும் மத்திய அரசு ஏற்காவிட்டால் நம்ம கட்சிக்கு ஒரு லாபமுமில்லை. ஜனங்களுக்கு நம்மேல் நம்பிக்கை ஏற்படாது.''

''அதை ஏற்படுத்தத்தான் இந்த ராஜிநாமா. நாம் அவசரப்பட்டுச் செய்ய மாட்டோம் பாதல்! ஆனால் அதிகத் தாமதமும் படக் கூடாது. அக்டோபருக்குள் இங்கே தேர்தல் நடக்க வேண்டும். ஓர் உடன்பாடு அதற்குள் ஏற்படாவிட்டால் பஞ்சாபுக்கு நல்லதில்லை...''

''நீங்கள் அவசரப்படுகிறீர்கள். எந்த உடன்படிக்கைக்கும் பாபா ஜொகிந்தர் ஸிங்கின்

கட்சி, நாம் ஏற்படுத்துவதை ஒப்புக் கொள்ளாது...''

''ஜனங்களுக்கும் அவர்களுக்கும் சம்பந்தமில்லை தோஹ்ராஜி!''

அவர்கள் இன்னும் யோசனையில் இருந்தார்கள்.

''நீங்கள் செய்கிறீர்களோ இல்லையோ, நாளைக்கு நான் SGPC யிலிருந்து ராஜிநாமா செய்யப் போகிறேன்.''

அவர்கள் சற்று நேரம் மௌனமாக உட்கார்ந்து எதுவும் பேசாமலே எழுந்து போனார்கள்.

வெளியிலிருந்த செக்யூரிட்டி கார்ட் உள்ளே ஒரு முறை எட்டிப் பார்த்து ஏதாவது வேண்டுமா என்று கேட்டான்.

''ஒன்றும் வேண்டாம். யாரையும் உள்ளே விடாதே!'' என்றார்.

கண்களை மூடிப் படுத்த நிலையில் கிட்டத்தட்ட பத்து வருஷங்களாகத் தமது வாழ்வில் ஏற்பட்ட ஏற்றங்களும் இறக்கங்களும் அவமானங்களும் இப்பொழுது தோன்ற ஆரம்பித்திருக்கும் நிராசையும் விரக்தியும் மனத்தில் நிழற் படங்களாக விரிய ஆரம்பித்தன. எப்படிப்பட்ட சதுரங்க விளையாட்டு! கடைசியில் எதைச் சாதிக்க முடிந்தது? தற்சமயம் சீக்கியர்கள் அவமான உணர்வினால், தாழ்வு மனப்பான்மையினால், அதிலிருந்தே ஜனித்த கோபத்தினால் வெதும்பிக் கொண்டிருக்கிறார்கள். அதைச் சமாதானப்படுத்தி நிமிர்த்தி விட நான் முயற்சி செய்யாவிட்டால் பஞ்சாபில் வேறு யாரும் முயலமாட்டார்கள். டில்லியின் பொறுப்பு அது என்று மெத்தனமாக இருப்பார்கள்.

நேரம் ஆற்று மணலாய்க் கைவிரல் இடுக்



இல் சரிந்து வருவது போல் அவருக்குப் பதைத்தது.

சில மாதங்கள் முன் வரை அவருக்கும் கோபம் இருந்தது. கண் மூடித்தனமான ஆத்திரம் இருந்தது. பழிக்கப்பட்ட சமூகம் என்னுடையது என்கிற தாழ்வு மனப்பான்மை இருந்தது. ஜெயிலிலிருந்து திரும்பி வந்ததும் நிச்சயமாக இதற்கு ஏதேனும் செய்தாக வேண்டும் என்கிற வேகம் எழுந்தது.

ஆனால் பஞ்சாபில் காலை வைத்ததும் தன் பலவீனத்தின் பிரக்ஞை அதிர்ச்சியைத் தந்தது. அங்கிருக்கும் ஜ்வாலை தன்னைக் கபளீகரம் செய்துவிடும் என்று பயமேற்பட்டது. அகாலிதல் காரர்களின் குரல் எழும்ப முடியாமல் பிந்திரன் வாலேயின் ஆவி எல்லார் குரல் வளையையும் அமுக்கிற்று.

எத்தனை பயமுறுத்தல்கள்! இரவுபடுத்தால் காலை சூரியனைப் பார்ப்போம் என்கிற நம்பிக்கையில்லாத நாட்கள். அந்த நாட்களில் தான் மிகத் தீவிரமான தீர்மானம் எழுந்தது. இந்த உயிரைக் காப்பாற்றியாக வேண்டும் கொஞ்ச நாட்களுக்காவது—

என் கண் முன்னால் பஞ்சாப் சர்வ நாசமடைவதை என்னால் பார்த்துக் கொண்டிருக்க முடியாது.

இந்த அலையோடு கொஞ்ச நாட்கள் போயாக வேண்டும். மீண்டும் இந்த நிலத்தில் கால் ஊன்றும் வரை, பயங்கரவாதிகளின் கவனத்தைத் திருப்பும் வரை...

ஆனால் வெகு சீக்கிரத்தில் புரிந்து விட்டது இந்தப் பயங்கரவாதிகளை இயக்குவது ஒரு ராட்சஸ வெறி என்று. பஞ்சாபைத் துண்டிக்கும் வரை அந்த வெறி அடங்காது என்று... வெகு நாளைய நண்பர் குஜ்ரால் டில்லியிலிருந்து பதறிக் கொண்டு அவரைப் பார்க்க வந்தது ஞாபகத்திற்கு வந்தது.

"ஸந்த்ஜீ, எதற்காக இப்படி முரண்பாடாகப் பேசிப் பஞ்சாபுக்கு வெளியில் இருப்பவர்களைக் குழப்புகிறீர்கள்?"

என்று குஜ்ரால் பதைத்தார்.

"நீங்களும் அடிப்படையில் ஒரு காலிஸ்தானி என்று இந்தியமக்கள் நினைத்துக்கொள்ளவா? அந்த மாதிரி ஓர் எண்ணம் நிலைத்துப் போனால் உங்களுக்கு யாருடைய ஆதரவு கிடைக்கும்? அரசின் சமாதான முயற்சிகளையெல்லாம் சீக்கியர்கள்தான் தடுக்கிறார்கள் என்கிற எண்ணம் அல்லவா ஏற்படும்? நீங்கள் பயங்கரவாதத்தைக் கண்டிக்காவிட்டால், ஒற்றுமையைப் பற்றி வலியுறுத்தாவிட்டால், மக்களுக்கு உங்கள் மேலும் சீக்கியர்கள் மேலும் நம்பிக்கை போய் விடும். பயங்கரவாதிகளின் கை ஓங்கிவிடும். புதிய பிரதமர் திறந்த மனத்துடன் காத்திருக்கிறார். அருமையான சந்தர்ப்பத்தை நீங்கள் பயன்படுத்திக் கொள்ளவில்லையானால் பஞ்சாபுக்கு நஷ்டம் மட்டுமில்லை, நீங்கள் நம்பிக்கை வைத்திருக்கும் மதத்துக்கும் இனத்துக்கும் துரோகம் செய்த மாதிரி. நிமிருங்கள் ஸந்த்ஜீ! உங்களுக்குப் பூரணப் பாதுகாப்பு அளிக்க ஏற்பாடு செய்யச் சொல்கிறேன்!"

உற்ற நண்பனைத் தவிர வேறு யார் இப்படி உலுக்குவார்கள்? குருசரன் ஸிங்கும் அன்று கோபமாகக் கத்திவிட்டுப் போனார். ஆனால் குஜ்ராலின் வார்த்தைகள் மனத்தில் பெரிய சலனத்தை ஏற்படுத்திவிட்டன.

பயங்கரவாதிகளின் கை ஓங்கிக் கொண்டு போவதை வினாடிக்கு வினாடி உணர முடிந்தது.

பாபா ஜொகிந்தர் ஸிங் பொறுப்பில்லாமல் பயங்கரவாதம் ஒன்றுதான் வழி என்று பேசும் பேச்சின் விளைவுதான் தில்லியில் நடந்த 'பாம்' வெடிப்புகளுக்குக் காரணம் என்று தோன்றிற்று.

லோங்கோவால் திடீரென்று தீர்மானத்துக்கு வந்தார். எனக்கும் இவர்களுக்கும் சம்பந்தமில்லை என்று காட்டும் தருணம் வந்து விட்டது....

அன்று அந்த முடிவுக்கு வந்தது எத்தனை புத்திசாலித்தனமானது என்று கடந்த இரண்டு மாதங்களில் புரிந்து விட்டது. அவர் பக்கம் நிறைய ஆள் பலம் உண்டு என்று நிரூபிக்கும் வகையில் அகாலிதல் காரர்கள் அவரை ஆதரிக்க முன் வந்து விட்டார்கள். அவரது ராஜினாமாவை ஏற்காமல் மீண்டும் தலைவராக இருக்க வேண்டும் என்று வற்புறுத்தி விட்டார்கள். வன்முறைகளை இப்பொழுது பகிரங்கமாகக் கண்டிக்க முடிந்தது. சீக் — ஹிந்து ஒற்றுமையின் அவசியத்தைப் பற்றி அடித்துப் பேச முடிந்தது.

பாபா ஜொகிந்தர் ஸிங் அமர்ந்திருக்கும் பொற்கோவில் பக்கமே போகாமல் ஆனந்த பூர் ஸாஹிப்பிலிருந்து செயல்படும் போது கட்சியின் இளைஞர்கள் அவர் வாதங்களை ஏற்கும் மனநிலையில் இருப்பதைக் கண்டு பெரிய சமாதானமேற்பட்டது.

கடந்த ஒரு மாதமாகப் பல ரகசியச் சந்திப்புக்கள் அவருக்கும் அரசின் பிரதிநிதிகளுக்கும் இடையே ஏற்பட்டுக் கொண்டிருக்கின்றன. ஒவ்வொரு சந்திப்பும் நம்பிக்கையையும் தைரியத்தையும் அதிகரித்திருக்கின்

* விஜய் அமிர்தராஜ் நன்றாகச் சமையல் செய்வார். இவர் செய்யும் கோழிக் கறிக்கு இவர் நண்பர்கள் 'Chicken a la Vijay' என்று பெயர் சூட்டியிருக்கிறார்கள். ஒரு சமயம் ஓர் அமெரிக்கப் பத்திரிகையில் இவர் பெயர் 'ஸ்போர்ட்ஸ்' பக்கத்திலும் 'சமையல் குறிப்பு' பக்கத்திலும் வந்திருந்தது.

—தகவல்: ஏ. கே. நாசர்.

றன. ஆனந்தபூர் ஸாஹப் தீர்மானங்களின் கூடமான வாக்கியங்களையெல்லாம் முடிந்த வரை தெளிவான பாஷையில் படித்தவர் பலரின் உதவியோடு எழுதியாகி விட்டது.

நேற்று பிரதமரின் குரல்போனில் நேரிடையாக அழைப்பு விடுத்தது.

''நீங்கள் நேரில் வாருங்கள். உங்கள் கோரிக்கைகளை எங்களால் முடிந்த வரையில் ஏற்றுக் கொள்கிறோம்.''

சண்டிகாரில் கவர்னரைச் சந்தித்து விட்டு தோழர் பல்வந்த் ஸிங் வீட்டிற்குச் சென்ற போது பாதலும் தோஹ்ராவும் முகத்தில் சுரத்தில்லாமல் உட்கார்ந்திருந்தார்கள். இவர்களது பயம் பயங்கரவாதிகளைக் கண்டா அல்லது வளரும் என் செல்வாக்கைக் கண்டா என்று விநாடி நேரம் எழுந்த சந்தேகத்தை லோங்கோவால் அவசரமாக அப்புறப் படுத்திப் புன்னகையுடன் கை கூப்பினார்.

''தில்லிக்குப் போகத் தீர்மானித்து விட்டீர்களா ஸந்த்ஜீ?'' என்றார் பாதல்.

''ஆமாம், உங்கள் அனுமதியோடு, ஆசியோடு. நீங்களும் வர வேண்டும், வரமாட்டீர்களா?''

''எங்களுக்கு முழுச் சம்மதமில்லை'' என்றார் தோஹ்ரா. ''மிகக் கஷ்டப்பட்டு நம்முடைய கட்சியின் பலத்தை மீண்டும் நிலை நாட்டிக் கொண்டிருக்கிறோம். மத்திய அரசுடன் இந்தப் பேச்சு வார்த்தை தோல்வி அடைந்தால் பிறகு எல்லாவற்றையும் இழந்து விடுவோம்.''

லோங்கோவால் மிருதுவான குரலில் சொன்னார்:

''நான் படிப்பு எழுத்தறிவில்லாதவன். ஆனால் பிரதமரின் குரலில் போலித்தனம் இல்லை; பஞ்சாப் பிரச்னையைத் தீர்க்கும் உண்மையான கரிசனம் தெரிகிறது என்று நம்புகிறேன்.''

''ஆ! பழசெல்லாம் உங்களுக்கு ஞாபகமில்லை. மத்திய அரசுடன் முன்பு எத்தனை முறை பேச்சு வார்த்தை நடத்தினோம்? என்ன ஆச்சு?''

''பழசை மறக்க வேண்டியது இப்பொழுது மிக அவசியம் பாதல்! இப்பொழுது புதிய சரித்திரம் உருவாகிக் கொண்டிருக்கிறது.''

''ஆஹா! பழசிலிருந்து பாடம் கற்காவிட்டால் சரித்திரம் திருப்பப்படும்...''

கடைசி வரை அவர்கள் உடன்படவில்லை. அவருடைய வாதத்தை அவர்கள் ஏற்கவில்லை.

''நீ அவசரப்படுகிறாய். பிறகு வருந்தப் போகிறாய்!'' என்று கூறிவிட்டுக் கிளம்பினார்கள்.

அவர்கள் சென்ற பிறகு வெகுநேரம் அவர் குழப்பத்தில் இருந்தார்.

பேச்சு தோல்வி அடைந்தால்! இவர்கள் சொல்வது போல் நிலைமையைத் தலை கீழாக்கிவிடும். அகாலிதல்லின் மதிப்பு ஜனங்களின் பார்வையில் கீழிறங்கிவிடும். பயங்கரவாதிகளின் ஆட்சி நிரந்தரமாகிப் போகும்...

பேச்சு வெற்றியடைந்தால் — இதற்கெல்லாம் நேர்மாறான, சுபிட்சமான ஆரோக்கியமான விளைவுகள் ஏற்படும் —

ஆனால் ஒன்று நிச்சயம். அந்த வெற்றிக்குப் பிறகு பயங்கரவாதிகள் என்னை உயிரோடு வைத்திருக்க மாட்டார்கள். அவர் வெகுநேரம் யோசனையில் ஆழ்ந்தார்.

பஞ்சாபின் சமாதானத்துக்கு முன் இந்தப் பலி ஒரு பெரிய இழப்பு இல்லை என்று சொல்லிக் கொண்டார்.

இன்னும் குழப்பம் விடவில்லை. கடைசியில் அவர் பல்வந்திடம் சொன்னார்:

''நான் யாருடைய பேச்சையும் கேட்கப் போவதில்லை. குருவின் 'வாக்'கைத்தான் கேட்கப் போகிறேன்'' என்றபடி குருகிரந்தம் வைத்திருந்த அறைக்குச் சென்று மண்டியிட்டுக் கண்மூடி வணங்கிக் கிரந்தத்தைத் திறந்தார்.

'என் கண்ணில் படும் முதல் வாக்கியப் படி நடப்பேன், வழி காண்பி.'

கண்ணில் 'வாக்' பட்டது:

''முக்கியமான விஷயங்களில் குழம்பித் தவிக்காதே. துணிவுடன் செயல்படு.''

பிரவாகமாய் மனசு பொங்கிற்று. அவர் மீண்டும் வணங்கிப் பல்வந்திடம் புன்னகையுடன் சொன்னார்:

''குருவின் ஆக்ஞை இது பல்வந்த். நமக்கு வெற்றி நிச்சயம்!''

* * * * *

கிட்டத்தட்ட அகாலிகளின் எல்லாக் கோரிக்கைகளையுமே ஏற்றுக்கொண்டு ஒப்பந்தத்தில் கையெழுத்திட்ட அந்த அதிசய இளைஞரை லோங்கோவால் கனிவுடன் பார்த்துப் புன்னகை புரிந்து அணைத்துக் கொண்டார். 'சொந்த சோகத்தின் நினைவுச் சுவடே இல்லாமல் கர்மமே கண்ணாய் பஞ்சாப் பிரச்னைக்கு முடிவு காண விழைந்த இந்த இளைஞன் என்னை விட உயர்ந்தவன்' என்று நினைத்துக் கொண்டார்.

பிரதமர் அவருடைய கைகளைப் புன்னகையுடன் குலுக்கினார்.

''உங்களுக்கு என் வாழ்த்துக்கள் ஸந்த் லோங்கோவால்ஜீ! இனிமேல் உங்களுக்கு ஆபத்து ஏற்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். என் 'புல்லெட் ப்ரூஃப் வெஸ்டை' எடுத்துக் கொள்ளுங்கள். உங்களுக்குத்தான் அது இப்பொழுது தேவை!''

பிரதமரின் வார்த்தைகள் அவருள் ஏற்படுத்திய நெகிழ்ச்சி புன்னகையாக விரிந்தது.

''நன்றி, வாஹே குருவின் சித்தப்படி எல்லாம் நடக்கும். கவலைப்படாதீர்கள் என்னைப் பற்றி.''

அன்று இரவு மன நிறைவுடன் படுக்கச் சென்றபோது ஸந்த் லோங்கோவால் பிரார்த்தித்துக் கொண்டார்:

''வாஹே குரு! நான் காத்திருக்கிறேன். எனக்குச் சாவைக் கண்டு இப்பொழுது பயமில்லை.''

(தொடரும்)


"ஸ்டேஃப்ரீ பெல்ட் இல்லாத நேப்கின்கள்-வசதிக்கு வசதி, சுகத்துக்கு சுகம், விடுதலை உணர்வுடன் விரும்பியதைச் செய்கிறேன்"
பெல்ட் இல்லை, நாடா இல்லை, கவலை இல்லை!
உரியுங்கள்...ஒட்டுங்கள்:
இறுக்கமாக அணிந்துள்ள பேன்ட்டியின்மீது ஒட்டும் பகுதியை வைத்து அழுத்துங்கள்.
ஸ்டேஃப்ரீ பெல்ட் இல்லாத நேப்கின்கள் இருந்துவிட்டால், பெல்ட், நாடா, ஊசி, லூப் என்று எதைப்பற்றியுமே நான் கவலைப்பட வேண்டியதில்லை. முண்டு, முடிச்சு கிடையாது. வெட்டு, சிராய்ப்பு ஏதுமில்லை. எவ்விதமான அசௌகர்யமும் இல்லை.
ஸ்டேஃப்ரீயில் உள்ள ஒப்பற்ற ஒட்டும்பகுதி, நேப்கினைக் கச்சிதமாகப் பொருந்த வைக்கிறது. அணிவது சுலபம், மாற்றுவதும் எளிது. சாதாரண நேப்கினைவிட, ஸ்டேஃப்ரீ மிகவும் வசதியானது, சுகமளிப்பது.
ஸ்டேஃப்ரீ என் உடலோடு ஒட்டி உறவாடுவதுடன், உயர்ந்த பாதுகாப்பும் அளிக்கிறது. அதை அணிந்து என் மனம் விரும்பியதைச் செய்யமுடிகிறது. விரும்பியதை அணியவும், கவலையின்றி வெளியில், விரும்பிய இடத்திற்கு சென்றுவரவும் முடிகிறது.
அதுமட்டுமா? உங்களுக்குத் தேவையான சுகாதாரப் பாதுகாப்பு அனைத்தும் கிடைக்கிறது.
ஒரு முறை அணிவு நேப்கினான ஸ்டேஃப்ரீயில் அதிக உறிஞ்சும் தன்மை கொண்ட உள்-அடுக்குகள் அமைந்துள்ளன. அத்துடன் 3-வழி நீல நிற பிளாஸ்டிக் லேயரும் இருப்பதால் கறை படியுமோ என்ற கவலை ஒருபோதும் இல்லை. மேலும் இதில் அதி மென்மையான விசேஷ ஒண்டர்ராப் அமைந்திருப்பதால் ஈர உணர்வு சிறிதுமின்றி எப்போதும் உற்சாகத்துடன் உங்களால் உலாவ முடிகிறது.
10 அல்லது 20 நேப்கின்கள் கொண்ட பாக்கெட்டுகளாக கிடைக்கின்றன
Stayfree
விடுதலை உணர்வுடன் விரும்பியதைச் செய்திட ஸ்டேஃப்ரீ
Johnson & Johnson

# பூவே, புத்தாடை சூட வா!

மத்திய அரசு அளிக்கும் சிறப்புத் தள்ளுபடியை ஹேண்ட்லூம் ஹவுஸ் உங்களுக்கு வழங்குகிறது.

விரைந்து வாருங்கள்! அனைத்து இந்திய ரகங்களில் தேவையானதைத் தேர்ந்தெடுங்கள்.

## 20%

**தீபாவளி சிறப்புத் தள்ளுபடி**

**21-10-85 முதல்**

## ஹேண்ட்லூம் ஹவுஸ்

(மத்திய அரசு ஆதரவு பெற்றது)
முழுவதும் ஏர்கண்டிஷன் செய்யப்பட்டது.
7, ரத்தன் பஜார், சென்னை 600 003.

**கோயம்புத்தூர் :**
100, திவான் பகதூர் ரோடு, R.S.புரம்,
கோயம்புத்தூர் 641 002.

**திருச்சி :**
சுமங்கலி பட்டு கூட்டுறவு
சூப்பர் மார்க்கெட்
464, பெரிய கடைத் தெரு,
திருச்சி 620 008.




**ஞாயிறு மற்றும் விடுமுறை நாட்களில் திறந்திருக்கும்.**

# ‘மண்ணுலே பொறந்து மண்ணையே பிசைந்து மண்ணுக்கே போறாங்க..

**தென்னார்காடு மாவட்டம் திண்டிவனம் அருகிலுள்ள சிங்காணிக் குப்பத்தில் தட்டம்மை நோயினால் இருபத்திரண்டு குழந்தைகள் இறந்து போனார்களல்லவா? அந்தக் கிராமத் துக்குச் சென்று வந்த நமது நிருபர் எழுதுகிறார்...**

* பாதிக்கப்பட்ட குழந்தை.



முனியம்மா — கல்லாடன் தம்பதிகளுக்கு நான்கு குழந்தைகள். மூத்தவன் சரவணன். அடுத்தது வெங்கடேஷ், மூன்றாவது சிவகுமார்; கடைக்குட்டி கல்லம்மா (குல தெய்வத்தின் பெயர்). முதலில் வெங்கடேஷுக்குத்தான் 'மாரியாத்தா' வந்திருந்தாள். கிராம முறைப்படி, எங்கும் வைத்தியத்துக்கு அழைத்துச் செல்லாமல், வீட்டிலேயே வைத்திருந்தார்கள். மாரியாத்தாவும் இறங்கி விட்டாள். ஆனால் தொடர்ந்து வந்த ரத்த பேதி, வெங்கடேஷைத் துவள வைத்து விட்டது.

''எங்க ஊர்லேருந்து ஒன்றரை கி. மீ. நடந்து போய்த்தான் திண்டிவனத்துக்குப் பஸ் ஏறணும். அதுவும் ஒரு நாளைக்கு இரண்டு ப்ஸ்கள்தான். வெங்கடேஷைத் திண்டிவனம் ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போனேன். ஆனால் டாக்டர்கள் கவனிக்கவே இல்லே. அதனால் அருகே தாதாபுரம் என்னும் ஊரிலுள்ள தனியார் மருத்துவரிடம் காண்பித்தேன். அவரும் மருந்து கொடுத்துப் பார்த்தார். பேதி நிற்கவில்லே. புரட்டாசி முதல் சனிக்கிழமையன்று வெங்கடேஷ் இறந்து போனான். வெங்கடேஷுக்கு நோய் வந்து படாதபாடு படுத்திக் கொண்டிருந்த போதே அடுத்தவன் சிவகுமாருக்கும் 'மாரியாத்தா' வந்து போய் பேதி ஆரம்பித்தது. அடுத்த சனிக்கிழமை சிவகுமாரும் இறந்து போனான். கடைக்குட்டி கல்லம்மாவும் மூன்றாவது சனிக்கிழமை இறந்து போனாள். அதனால் பயந்து போய்ப் பெரிய பையன் சரவணனைச் சென்னைக்கு அனுப்பிவிட்டோம்!'' என்று சோகத்துடன் சொல்லி முடித்தார்கள்.

சிங்காணிக் குப்பம் கிராமம் முழுக்க, முழுக்க விவசாயத்தையே தொழிலாகக் கொண்டவர்களின் ஊர். வானம் பார்த்த பூமிதான். வருடத்தில் நான்கு மாதங்கள் தொடர்ந்தாற்போல் வேலே இருந்தால் பெரிய விஷயம்! கஞ்சியோ, கூழோ குடித்துக்

## -திண்டிவனத்தில் ஒரு தாயின் கதறல்

காலம் தள்ளி வருபவர்கள். ஏதாவது உடம்புக்கு வந்தால் திண்டிவனத்துக்குத்தான் போக வேண்டும். ஆனால் பதினைந்து கி. மீ. தூரத்திலுள்ள திண்டிவனத்துக்குப் போய் வர முக்கால் நாள் ஆகும்.

ஆகஸ்ட் இறுதி வாரத்தில் தட்டம்மை பற்றிக் கொண்ட இந்த ஊரில் இதுவரை இறந்து போன குழந்தைகளின் எண்ணிக்கை



• திண்டிவனம் MLA: டாக்டர்களின் அலட்சியமும் தான்!

இருபத்திரண்டு; கல்லாடன் குடும்பத்தில் மட்டும் மூன்று குழந்தைகள்! ஊர் எல்லையைத் தாண்டிப்போகக்கூடாது என்ற நம்பிக்கையில் இந்தக் குழந்தைகள் எல்லாம் பலி ஆகி விட்டிருக்கிறார்கள்.

வெங்கடேஷின் பாட்டி வள்ளியம்மாளைப் பார்த்த போது, "எங்க கிராமத்துலே இதுக்கு முன்னாடி மாரியாத்தா வந்து குணமாயிப் போயிருக்கு. இப்போத்தான் இப்படி!" என்று கூறிப் புலம்பினார். "நான்காவது படிக்கும் வெங்கடேஷுக்குப் புஸ்தகம் எல்லாம் வாங்கிக் கொடுத்துட்டோம்... 'அம்மா போட்டோ எடுத்துக்கலாம்' என்று என்னிடம் அடிக்கடி சொல்லுவான். ஆனால் அவனுடன் என்னால் ஒரு போட்டோக் கூட எடுத்துக்க முடியலியே. அவன் போன பின்பு என்னை மட்டும் தனியா போட்டோ எடுக்க நீங்களே....." என்று முனியம்மா அழுதார்.

இருநூறு குடும்பங்கள் கொண்ட சிங்காணிக்குப்பத்தில் ஐந்தாவது வரை படிக்கத்தான் பள்ளிக்கூடம் உண்டு. செங்கல்பட்டு மாவட்ட எல்லையையும் வட ஆற்காடு மாவட்ட எல்லையையும் ஒட்டி அமைந்திருக்கும் இந்தக் கிராமம் தென்னாற்காட்டைச் சேர்ந்தது. எல்லையில் இருப்பதனால் அரசின் கவனிப்பே இல்லை என்று கூடச் சொல்லலாம். திண்டிவனம் — வந்தவாசி சாலையில், தாதாபுரம் என்ற ஊரில் வலது புறமாகத் திரும்பினால் ஐந்து கி. மீ.யில் இருக்கிறது கிராமம். நல்ல கப்பி ரோடு. அதன் வழியாக வந்தவாசி வரையில் கூடப் போகலாம். பஸ் போக முடியும். ஆனால் தாதாபுரம் சிங்காணிக் குப்பம் கிராமம் வழியாக வந்தவாசிக்கு, அரசு பஸ் விடவில்லை.

கிராமத்து இளைஞர் ஜெயச்சந்திரனைப் பார்த்த போது, போக்குவரத்து இல்லாததால்தான் தங்கள் கிராமக் குழந்தைகள் இவ்வாறு மரணமடைய நேரிட்டது என்பதை வலியுறுத்திச் சொன்னார்: "நல்ல ரோடு இருக்கு. திண்டிவனத்துக்குப் பஸ் விட்டால் நாங்க கஷ்டமில்லாமல் சென்று வரலாமே!" என்று.



• வள்ளியம்மாள்: இப்பத்தான் இப்படி...

, இப்போது பஸ் விட்டுக் கொண்டிருக்கும் தனியார் கம்பெனி தவிர அரசும் பஸ் விட என்ன தடை?

"எங்க கிராமத்துலே போடற சத்துணவு சரியில்லாததுதான் இந்த மரணத்துக்கெல்லாம் காரணம்!" என்றார் விஸ்வநாதன். "நிறைய முறை கம்ப்ளெயிண்ட் பண்ணிட்டோம், ஒன்றும் பலனளிக்கவில்லை. மாறாகச் சத்துணவு சாப்பிட வரும் குழந்தைகளைத் தடுத்ததாக எங்கள் மீதே வழக்குப் போட்டிருக்கிறார்கள்!" என்று மனம் குமுறுகிறார் அவர்.

இதை நிரூபிக்க ஆதாரமில்லை என்றாலும் பொதுவாகவே சத்துணவுக் கூடங்களில் பரிசுத்தம் இல்லையென்றால் உடல் ஆரோக்கியத்தை விட உடல் நோய்கள் பரவ அவை உதவும் என்பதை மறுப்பதற்கில்லை.

"இறந்து போன இருபத்திரண்டு குழந்தைகளில் பதினொரு குழந்தைகள் சத்துணவு சாப்பிடும் குழந்தைகள். குழந்தைகள் மாரியாத்தா வந்து இறந்து போனதாக நான் சொல்ல மாட்டேன். அதைத் தொடர்ந்து வந்த ரத்த பேதியும், ஜுரமும்தான் குழந்தைகளின் சாவுக்குக் காரணம். இதில் துரதிர்ஷ்டம் என்னவென்றால் ரத்தப் பேதியையும் 'குடல் மாரியாத்தா' என்று சொல்லி வைத்தியம் செய்யாததுதான்" என்கிறார் அவர்.

அறுபது வயதான கல்லம்மாவின் பேத்தி உமாவும் இறந்து போன குழந்தைகளில் ஒருத்தி. "என்ன ஆயா, நீங்கள் ஏன் டாக்டர் கிட்டே போகலே?" என்று கேட்டோம்.

"அட போ தம்பி! நீ பட்டணத்துலே இருந்து வந்து பேசறே! நாங்க மண்ணுலே

பொறந்து, மண்ணையே பிசைந்து மண்ணுக்குப் போறவங்க. மாரியாத்தா கோவமா இருக்கான்னு ரெண்டு தடவை திருவிழாச் செஞ்சோம். ஆனா அவ கோவம் தணியலே" என்றார் அந்தப் பாட்டி.



• விஸ்வநாதன் : உண்மையைச் சொன்னதால் வருத்..



• முனியம்மாள் : மூன்று குழந்தைகளையும் இழந்து விட்டேன்...



• கல்லம்மாள் : மாரியாத்தா கோவம் தணியலே...

அல்ராஜ் என்பவரின் மூன்று குழந்தைகள் பாதிக்கப்பட்டிருக்கின்றன. அல்ராஜ் மட்டும் திண்டிவனம் சப்-கலெக்டரிடம் சொல்லவில்லையென்றால், சாவு எண்ணிக்கை அதிகமாக இருந்திருக்கும். செஞ்சி தொகுதியைச் சேர்ந்தது இந்த ஊர். அ. தி. மு. க. எம். எல். ஏ. முருகானந்தத்தைச் சந்தித்த போது, "இதற்குக் காரணம் டாக்டர்களின் அலட்சியம்தான்!" என்று அடித்துச் சொன்னார். "ஆகஸ்ட் மாதத்திலேயே இந்த நோய் கிராமத்தில் இருப்பது தெரிந்தும் அதைத் தடுப்பதற்குப் போதிய நடவடிக்கைகளை டாக்டர்கள் எடுக்கவில்லை. குறிப்பாகக் கிராம அதிகாரி இதுபற்றிச் சரியான தகவல் கொடுக்கவில்லை" என்றார்.

வீட்டுக்கு வீடு சென்று மக்களின் உடல் நலத்தைக் கவனிக்கும் ஹெல்த் விஸிட்டர் சிங்காணிக் குப்பத்துக்கு வந்து ஒரு வருடத்திற்கும் மேலாகிவிட்டதாம். காரணம்; அந்த வேலைக்கு யாரும் நியமிக்கப்படாததுதான்!

எண்பது குழந்தைகளைத் திண்டிவனம் ஆஸ்பத்திரியில் சேர்த்ததில் பாதிக் குழந்தைகளுக்குமேல் குணமாகி வீடு திரும்பி விட்டார்கள். ஆனால் திண்டிவனம் ஆஸ்பத்திரியில் இந்தக் குழந்தைகளுக்கு இடம் இல்லாமல் வராந்தாவில் போட்டு வைத்திருப்பதுதான் கண்டிக்கத் தக்கது. இந்த வியாதி வந்தால் சுத்தமாகத் தனியிடத்தில் வைத்திருக்க வேண்டும். ஆனால் ஆஸ்பத்திரியில், பிரசவ வார்டுக்குப் பக்கத்திலேயே இந்தக் குழந்தைகளைப் போட்டுள்ளார்கள். அவர்களுக்குப் பாய், தலையணை எதுவும் இல்லை.

"இது போன்றதொரு நோய் ஒரு கிராமத்தைத் தாக்கினால், அந்தக் கிராமத்திலேயே தனிக்கொட்டகைபோட்டுச்சிகிச்சையளிக்க வேண்டும். வேறு இடத்துக்குக் கொண்டு செல்வதால் நோய்தான் பரவும்!" என்றார் திண்டிவனம் டாக்டர் ஒருவர்.

டாக்டர்கள் வட்டாரத்தில் விசாரித்த போது, "தட்டம்மை அல்லது மணல்வாரி அம்மை என்று சொல்லப்படும் 'மீஸில்ஸ்' வந்தால் இறப்பதற்கான சாத்தியக் கூறுகள் மிகவும் குறைவுதான் என்றாலும் நோயின் பின் விளைவுகள், மரணத்துக்கு முக்கிய காரணமாக இருந்திருக்கும்" என்று கூறுகிறார்கள். "'மாரியாத்தா' என்று சொல்லப்படும் 'மீஸில்ஸ்' இறங்கியபின் நிமோனியா, மூளைச் சுரம் வருவதற்கு வாய்ப்பு உண்டு. இறந்த குழந்தைகள் ரத்த பேதியால் இறந்திருக்கின்றன. பின் விளைவுகளில் இதுவும் ஒன்றாக இருந்திருக்கலாம். சரியான சமயத்துக்கு டாக்டர்களிடம் வந்திருந்தால் குணப்படுத்தி இருக்கலாம். கடவுள் நம்பிக்கை வேறு, நோய் விஷயம் வேறு என்பதை மக்களிடம் எடுத்துச் சொல்லித் தெளிய வைக்க வேண்டும்" என்றனர். பின் விளைவுகளுக்கு முக்கிய காரணம் குழந்தைகளுக்கு ஊட்டச் சத்து குறைவாக இருப்பதுதான். இதைக் கேட்கும் போது கடந்த மூன்று வருடங்களாகச் சத்துணவு போடுகிறோம் என்று அரசு பீற்றிக் கொள்வதுதான் நமக்கு ஞாபகம் வந்தது!

சிங்காணிக் குப்பத்தில் ஆரம்பித்த தட்டம்மையின் தாக்குதல் இப்போது மாவட்டம் முழுவதும் பரவியிருக்கிறது. அரசு விரைந்து நடவடிக்கை எடுத்துத் தடுப்பூசிகள் போட்டு, நோயுற்ற குழந்தைகளுக்கு வைத்திய வசதிகள் செய்யாவிடில், நிலைமை மோசமாகலாம். ரோட்டரி கிளப், லையன்ஸ் கிளப் போன்றவை விரைந்து செயல்பட ஆரம்பித்திருக்கின்றன. அரசும் விழித்துக் கொள்ளுமா?

—ப்ரியன்.

படங்கள் : மனோ.

# பாரத் ஓவர்சீஸ் பைனான்ஸஸ் & இண்டஸ்ட்ரியல் இன்வெஸ்ட்மெண்ட் கார்ப்பொரேஷன்

703 மவுண்ட்ரோடு, சென்னை-600 006

# கூடுதல் 3% வட்டியை

## 1985 நவம்பர் 15ந் தேதி வரை

**பிக்சட் டிபாசிட்டுகள்**

| | |
|---|---|
| 30 நாள் தவணை (குறைந்த காலம் 3 மாதங்கள்) | 25+3=28% (p.a.) |
| 1 ஆண்டு | 27+3=30% (p.a.) |
| 2 ஆண்டுகள் | 29+3=32% (p..a) |
| 3 ஆண்டுகள் | 31+3=34% (p.a.) |
| 5 ஆண்டுகள் | 33+3=36% (p.a.) |

அரசு அங்கீகரிக்கப்பட்ட வங்கிகளுடைய பண சர்டிபிகேட் திட்டம்

5 ஆண்டுகள் — 20%
7 ஆண்டுகள் — 24%
10 ஆண்டுகள் — 27%

மற்ற திட்ட முறைகள்

மும்மடங்கு திட்டத்தில் ரூ. 1,000 5ஆண்டுகளில் ரூ. 3,000 ஆக மாறுகிறது.

ரிகர்ரிங் டிபாசிட் 17% • சேமிப்பு திட்டம் 10%

அதிக வட்டி • நேரந்தவறாமை • பாதுகாப்பு • நம்பிக்கை • திட்டமிட்ட முதலீடு

**சென்னை அலுவலகம்:**
ஓரியண்டல் சேம்பர்ஸ் 703, மவுண்ட்ரோடு, சென்னை-600 006
(ஆனந்த் தியேட்டர் அருகில்)

**ஹைதராபாத் அலுவலகம்:**
1-7-145-C 10, சுபாஷ் தியேட்டர் எதிரில், (ராமகிருஷ்ண ஸ்டுடியோ அருகில்)
முஷிராபாத் ஹைதராபாத்-500 048

**மதுரை அலுவலகம்:**
46, நேதாஜி ரோடு, மதுரை-625 001

**பதிவு அலுவலகம்**
17, ஜெனரல் பேட்டர்ஸ் ரோடு, சென்னை-600 002. போன்: 849838

**எங்களது விசாகப்பட்டிணம் கிளை விரைவில் திறக்கப்படவிருக்கிறது.**

Chhaya/BOF/631

# தராசுக்குப் பதிலடி!

‘கல்கி’ 22.9.85 தேதி இதழின் கேள்வி–பதில் பகுதியில் கீழ்க்கண்ட கேள்வியும் பதிலும் இடம் பெற்றுள்ளது.

கேள்வி: புரட்சித்தலைவர் ஆட்சியில்தான் தொழில் புரட்சி, வெண்மைப் புரட்சி, பசுமைப் புரட்சியெல்லாம் ஏற்பட்டுள்ளதாக சுலோசனா சம்பத் கூறியிருப்பது பற்றி...?

“நாம் எங்கே போகிறோம் என்பது குறைந்தபட்சம் நமக்காவது தெரிந்திருக்க வேண்டும்’ என்று அடிக்கடி கூறுவார், ஈ.வெ.கி. சம்பத். தான் என்ன சொல்கிறோம் என்பது குறைந்தபட்சம் சுலோசனா சம்பத் அவர்களுக்காவது புரிந்திருந்தால், சந்தோஷம்தான்!”

இவ்வாறு ‘கல்கியார்’ தமக்கேயுரிய பாணியில் நகைச்சுவையை இழையோட விட்டிருப்பதாகத் திருப்திப்பட்டுக் கொண்டுள்ளார்.

ஆனால், முந்திய ஆட்சிகளோடு புரட்சித் தலைவர் அவர்களது ஆட்சியை ஒப்பு நோக்குவதானாலும்; அல்லது இந்தியாவின் பிற மாநில ஆட்சிகளோடு ஒப்பிட்டு நோக்குவதானாலும் – அரசியல் நடுநிலைக் கண்ணோட்டத்தோடும், விரிந்த பார்வையோடும் ஒப்பு நோக்குவோருக்கு உண்மையில் புரட்சித் தலைவர் அவர்களது ஆட்சியின் மேன்மையும், மேம்பட்ட சாதனைகளும் தெள்ளத் தெளிய விளங்கும்!

மாண்புமிகு புரட்சித் தலைவர் அவர்களது ஆட்சியில்தான் – தொழில், தொழிலாளர் அமைதி காக்கப்பட்டு – புதிய எண்ணற்ற தொழில்கள் பூத்துள்ளன.

இதனை ஆளுங்கட்சியினர் ஏதோ தற்பெருமைக்குக் கூறிக் கொள்வதல்ல; மத்திய அமைச்சர்கள், பிற மாநில முதல்வர்களே கூட தமிழகத்தில் பல மாவட்டங்களிலும் தோன்றியுள்ள புதிய தொழிற்பேட்டைகளையும்; இரும்பு, உருக்கு, காகிதம் என்று கனரகத் தொழில்களிலும் எண்ணற்ற சிறு தொழில்களிலும் எழுச்சிக் கோலமாய் எழுந்து நிற்கும் தொழிற் கோட்டங்களைக் கண்டு பாராட்டவே செய்துள்ளனர்.

# “ சாதனைகளை

மகளிர்க்கென்றே தனியாகத் தொழிற்பேட்டை; எலெக்ட்ரானிக் தொழிற்பேட்டை உருவாகத் திட்டம். இப்படிப் புதுமைகள் பல சாதித்திடும் புரட்சித் தலைவர் அரசு– அன்னிய நாட்டுத் தொழிலதிபர்களுக்கும், தமிழ்நாட்டில்வந்து பல பெரிய தொழில்களை அமைத்திட அழைப்பு விடுக்கப்பட்டு, பலர் ஆர்வம் காட்டுவதின் மூலம் எதிர்காலத்தில் எண்ணற்ற புதிய தொழில்களும் பூத்திடக் கூடிய வாய்ப்புகள் பிரகாசமாயுள்ளன.

வெண்மைப்புரட்சியைப்பொறுத்தவரை, பால் பண்ணைகளானாலும், பால் உற்பத்திப் பெருக்கு என்றாலும் தமிழகம் பிற மாநிலங்களுக்கு வழிகாட்டக் கூடிய அளவுக்கு வளர்ந்துள்ளதை, அன்றாடம் பால் அருந்திடும் மக்களே உணருவார்கள்.

பத்து ஆண்டுகளுக்கு முன் பால் என்பது, ஏதோ உயர்த்தட்டு மக்களுக்குஉரிய அரிதான பொருளாகவே கருதப்பட்டது. இன்று – குடிசைப் பகுதிகளிலும் ‘ஆவின்’ பால் சென்றடையும் அரிதான சாதனையைச் சாதாரண மக்களும் உணருகின்றனர்.

அநேகமாக அனைத்துமாவட்டங்களிலுமே – ஏழை மக்களுக்குக் கறவை மாடுகளை வாங்



# நான் உங்கள் ரசிகன்

**மோ**கனுக்குப் பச்சையான கண்கள். வித்தியாசமான கண்கள். அந்தக் கண்களில் ஓர் ஏக்கம். ரசிகத் துதி பாடும் ஏக்கம் என்று அறிமுகமாகிறார். ரஞ்சனி என்ற நடிகையின் ரசிகன் என்று சொல்லிக் கொள்வதிலேயே எத்தனை பெருமை அவருக்கு. வயலில் விதை தெளிக்க அபிமான நடிகை வருகிறார் என்று ராத்திரியோடு ராத்திரியாய்த் திருவிழாப் போல் செய்யும் ஏற்பாடுகள்தான் என்ன! ரஞ்சனியின் வெறி ரசிகனாய் அறிமுகம் செய்வதில் காட்டிய அழுத்தம் அப்படியே முன்

# “மூடி மறைக்காதீர்கள்!”



**—சுலோசனா சம்பத்**

குவதற்கு அரசு கடன் உதவிகளை வழங்கி — கூட்டுறவு முறையில் பால் பண்ணைகளின் மூலம் பால் பெறப்பட்டு கிராமங்களிலும் கூடத் தட்டுப்பாடின்றிப் பால் கிடைத்திடும் வசதியை மாண்புமிகு புரட்சித் தலைவர் அரசு சாதித்துக் காட்டியுள்ளது.

பசுமைப் புரட்சியை எடுத்துக் கொண்டாலும், பஞ்சமும் பற்றுக்குறையும், தட்டுப்பாடும் தலைவிரித்தாடிய தமிழகத்தில் இன்று எல்லா இடங்களிலும் பசுமைப் புரட்சி ஏற்பட்டு, உணவுத்துறையில் தட்டுப்பாடு நீங்கித் தன்னிறைவெய்தி, பிற மாநிலத்துக்கும் ஏன் பிற நாடுகளுக்கும் கூட அரிசியை ஏற்றுமதி செய்யக் கூடிய அரிய சாதனைகளை நிறைவேற்றிக் காட்டியுள்ளது புரட்சித் தலைவர் ஆட்சியே!

‘குறுவை தோற்றாலும், உணவில் பஞ்சம் வராது!’ சமாளித்திடும் அளவிற்கு அரிசிக் கையிருப்பு உண்டு’ என்று சொல்லத் தக்க அளவில், கடந்த ஆண்டுகளில் வறட்சி ஏற்பட்டும், இத்தகைய அரிதான நிலைமை ஏற்பட்டுள்ளது என்றால், வேளாண்மைத் துறையில் புரட்சித் தலைவர் அரசு காட்டி வரும் பசுமைப்புரட்சி — இவற்றைக் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டும்.

அதிகபட்சமாகவே முன்னேறியுள்ள துறைகளைக் குறைந்தபட்சம் கூடக் கணக்கில் கொள்ளாது, சாதனைகளை மூடி மறைத்துச் சாடுவதும், நகைச்சுவைப் பாணியில் நையாண்டி செய்வதும் ‘கல்கி’யாருக்குச் சுவையாக இருக்கலாம். ஆனால் அது மக்களுக்குச் சுவை கேடான பாணியாகும்!

ஈ. வெ. கி. சுலோசனா சம்பத்.

சென்னை — 2, தலைவர்,
தமிழ்நாடு தொழில் வளர்ச்சி நிறுவனம்
லிமிடெட்.

(தமிழ்நாடு தொழில் வளர்ச்சி நிறுவனத்தின் தலைவராக நியமிக்கப்பட்டிருக்கும் சுலோசனா சம்பத், தமிழக அரசின் சாதனைகளைப் பட்டியல் போட முன்வந்ததில் வியப்பொன்றுமில்லை. நாமும் கூட சாதனைகளே ஏற்படவில்லை என்று கூறவில்லை. எந்தக் கட்சி யார் தலைமையில் ஆட்சியில் இருந்தாலும் பல துறைகளில் வளர்ச்சி ஏற்படவே செய்யும். மக்களிடம் வரி வசூலிக்கப்படுவதே அதற்குத்தானே! ஆனால் வளர்ச்சியெல்லாம் புரட்சியாகி விடாது. அதைத்தான் தராசு பதில் குறிப்பிடுகிறது. தமிழகம் வேறு பல மாநிலங்களை ஒப்பு நோக்குகையில் பல துறைகளில் பின் தங்கியேயிருக்கிறது. இதையே இவ்விதழ் தலையங்கமும் அடிக்கோடிட்டுக் காட்டுகிறது.

— ஆசிரியர்.)

---

பாதியில் கரைந்து போகப், படம் திகில் ட்ராக்கில் இறங்குகிறது.

தன் கனவு நாயகியை அவதூறு சொன்ன செந்தாமரையைக் கொலை செய்துவிட்டுச் (தெளிவில்லாத காட்சி) சென்னைக்கு ஓடி வந்து, எதேச்சையாக அந்த நடிகையின் வீட்டிலேயே டிரைவர் வேலைக்குச் சேரும் போது மோகனின் காரெக்டர் குழப்பமாகிப் போகிறது.

ஸைக்கோ கேஸ் என்றே வைத்துக் கொள்வோம். தன் அபிமான நடிகையின் மூச்சைப் பொத்திச் சாகடிக்குமளவிற்குப் புத்தி நழுவிப் போகுமா என்ன? சரி, அப்படியே விட்டு விடுவோம். இறந்த உடம்பைக் கவனித்து விட்டல் போட்டோகிராபரையும், நடிகையின் மானேஜரையும் புத்திசாலித்தனத்தோடு தீர்த்துக் கட்டும் சாமர்த்தியம் அந்தத் டிமர்க் கொலைகாரனுக்கு எங்கேயிருந்து வந்தது?

லாஜிக்கை விட்டு விட்டால், துடிப்பான ஸீன்கள் நிறைய உண்டு. குறிப்பாய் நளினியின் சின்னப் பிஞ்சு மகள், சரியாகப் பேச வராமல் கொலைகாரனையும், பிணத்தையும் பார்த்து விட்டுப் ‘பீமா பீமா’ என்று பெரியம்மாவைச் சுட்டிக் காட்டும் கட்டங்கள். டிக்கியில் பிணம் இருப்பது தெரியாமல் நளினி ஷாப்பிங் கிளம்ப, அந்தக் காரைப் பின் தொடர்ந்து மோகன் வேனில் துரத்தும் காட்சியும் துடிப்பான ஸீன்.

வீல் வீல் என்று அலறுவதற்கு நளினியை விட்டால் ஃபீல்டில் ஆள் இல்லை’ என்று மறுபடியும் நிரூபணம். நளினியின் கணவனாய் வரும் ராஜீவுக்கு அநாவசியமாய் இன்ஸ்பெக்டர் உடுப்பையும் மாட்டிவிட்டு. அவர் ஒரு சப்.

ராதிகா, கொடுத்த பாத்திரத்தில் ரொம்ப சிக்.

எமோஷனல் காட்சிகளை விட, திகில் காட்சிகளில்தான் மனோபாலாவுக்குப் பழக்கம் அதிகமிருக்கலாம். அதற்காக மேலே மேலே என்று சீட்டுக் கட்டு மாளிகை போல் அடுக்கிக் கொண்டே போகும் போது, திகில் கூடத் திகட்டிப் போகும் என்பதை அடுத்த படத்திற்குள் புரிந்து கொள்வது நலம்.

— ஜெயமன்மதன்



# சாவி

முதலிலேயே ஒரு விஷயத்தைச் சொல்லி விட வேண்டும். சத்யராஜ் கதாநாயகனாக நடிக்கும் முதல் படம் என்ற பிரகடனமே தப்பு; சத்யராஜ் முழுநீள வில்லன் — அவ்வளவுதான்.

பணக்காரப் பெண்டாட்டியைத் தீர்த்துக் கட்டி விட்டுச் சொத்தை அபகரிக்க முடிவு செய்ததும் ஒவ்வொரு கட்டமாய்த் திட்டம் போடும் காட்சிகளில் மனிதர் ஜமாய்க்கிறார். முகத்தில் உருக உருகப் பேசிவிட்டு, முதுகில் ஆளை எப்படி க்ளோஸ் செய்யலாம் என்று மண்டையைத் தேய்த்துக் கொள்கிறார். போடும் திட்டம்தான் கொசகொசவென்று முதுகைச் சுற்றி மூக்கைத் தொடும் டைப்.

போதை மருந்து விற்பனை செய்யும் ஒருவனை பிளாக்மெயில் செய்து அவனை விட்டு சந்தேகப்படாத மனைவியை முடிக்கச் சொல்லி விட்டு, அதேநேரம் தனக்கு அழுத்தமான அலிபி (அலிபை?) வேண்டி யாரோடு கூட்டுச் சேர்கிறார் தெரியுமா? மனைவியின் ஆத்ம நண்பன் ஆனந்த் (நிழல்கள் ரவி) தோடு. எதிர்பாராமல் திட்டத்தில் குழப்பம் வந்து, மனைவி தப்பித்துக் கொல்ல வந்தவன் இறந்து போக, சரியான திருப்பம்தான்.

துப்பறியும் அதிகாரியாக ஜெயசங்கர் நுழைகிறார். சங்கு ஊதுவது போல் கையை வாயருகே வைத்து 'உக்கூ உக்கூ' என்று பெண் குரலில் இருமும் மானரிஸம். துறுதுறு வென்ற சின்னக்கண்களை வைத்துக்கொண்டு அவர் சத்யராஜை மடக்கி மடக்கிக் கேள்வி கேட்கும் காட்சிகள் சுவாரஸ்யமானவை.

கதையை ரொம்ப விஸ்தாரமாய்க் கொடுக்க வேண்டுமென்று யார் ஐடியா கொடுத்தார்களோ, கோர்ட், போலீஸ் விசாரணை என்று பின் பாதியில் கொஞ்சம் கொட்டாவி. க்ளைமாக்ஸ் துரத்தலில் உயிரில்லை.'

சத்யராஜின் மனைவியாய்ச் சரிதா. மாடர்ன் ட்ரெஸ்ஸெல்லாம் போட்டு கஷ்டப் படுத்துகிறார். கோர்ட்டில் வக்கீல் அவரைக் கேவலமாய்ப் பேசிக் கொண்டே போக, உள்ளுக்குள் அழுது கொண்டே துடிக்கும் ஸீனில் சரிதாவுக்கு வெற்றி என்றால், மேஜை மேலெல்லாம் ஏறிக் குதித்து ஓடி வந்து வக்கீலின் சட்டையைப் பிடித்து 'என் மனைவியை நீஎப்படி இப்படிப்பேசலாம்?' என்று சண்டை பிடிக்கும் சத்யராஜுக்கு டபிள் வெற்றி.

கல்லாப் பெட்டி சிங்காரமும், காந்திமதியும் நகைச்சுவைக்காக என்று சேர்க்கப்பட்டிருப்பது சரி. சிரிப்புத்தான் வரவில்லை; முகத்தைச் சுளிக்க வேண்டிய அருவருப்பாவது இல்லாமலிருந்திருக்கலாம்!

வித்தியாசமான படம்தான்; நீளத்தைச் சரியான இடங்களில் குறைத்துக் கொண்டிருந்தால் சுவாரஸ்யமான படமாயும் இருந்திருக்கும்.

— ஜெயமன்மதன்

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Frivate Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032 (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani Editor: K. Rajendran


அலைமகள் கடைக்கண்பட்டு ஒளிதரும்
பாவாய் கலைமகளாய் வருங்காலம்
எதிர்பட்டு ஜொலிக்குது பாராய்!
பசும்பொன்னும் அசல் பட்டு வகைகளுக்கு:
குமரன் சில்க்ஸ்
(இந்தியாவில் பிரத்யேக பட்டு ஜவுளிக்கான
மிகப் பெரிய ஏர்கண்டிஷண்ட் ஷோரூம்)
பனகல் பார்க் எதிரில்,
12, நாகேஸ்வர ராவ் ரோடு,
தியாகராய நகர்,
சென்னை-600 017.
போன்: 443544